


# கல்கி

*ஸ்வீட்டா... ஸ்டைலா... ஸ்மார்ட்டா...*

KALKI • 18.07.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்


"ஒதுக்கீடு தராட்டா வோட்டுப் போடமாட்டோம்"

மார்பிள் கிருஷ்ணன்!

அ.தி.மு.க. ரகசியம்!



## காதலிக்க ஆசை வரும்!

# கல்கி

18.07.2010

## ஆன்மிகம்



## அமரர் கல்கி பக்கம்



## அரசியல்



## தொடர்கள்



## சினிமா



## இந்தவார ஸ்பெஷல்

எத்தனை நாள் ஆச்சு இப்படி ஒரு படம் பார்த்து? துளியும் ஆபாசமில்லாமல், வன்முறை இல்லாமல், குடும்பத்தோடு உட்கார்ந்து வயிறு வலிக்கச் சிரிக்க வைத்த, ஜாலியாக ரசிக்க வைத்த டைரக்டர் சற்குணத்துக்கு முதல் வந்தனம். குரு மணிரத்னத்தின் சாயல் துளியும் இல்லாத பிரசண்டேஷன்.

களவாணி, தஞ்சை வட்டாரப் பகுதியின் இயல்பான கதை. அப்பா துபாயில் இருந்து சம்பாதித்து அனுப்ப, பைக்கில் ஊரைச் சுற்றும் ஊதாரி மைனர் மகன். மகன் எப்படியும் டாப்புக்கு வந்துவிடுவான் என்று உறுதியான நம்பிக்கையில் அம்மா. இந்தக் களவாணி எப்படி ஒரு பெண்ணின் மனசைக் களவாண்டு, பின்னர் பொறுப்பு வந்து மாறுகிறான் என்பதுதான் கதை.

'பசங்க' விமல் ஹீரோ. ஆளை அசத்தும் ஸ்டைல். எப்போதும் வெள்ளை வேட்டி, வெள்ளைச் சட்டை, பேச்சில் நக்கல், பார்வையில் குறும்பு. காதல் எட்டிப் பார்க்கும் போது துள்ளல். ஓவியா, புது ஹீரோயின். நெஞ்சில் நச்சென்று நாற்காலி போட்டு உட்கார்ந்துகொள்கிறார்.

சின்னச் சின்ன அழகு அம்சங்களை அடுக்கியே படம் நெடுக அசத்தியிருக்கிறார் டைரக்டர். LC112, வாயில் தண்ணீரை வைத்துக்கொண்டு பேசுவது, குடிபோதையில் பெண்ணைத் தூக்குவது, ஓவியா நட்ட நாற்றுகள் மட்டும் உயர்ந்து வளருவது என்று ரொம்ப அலட்டிக் கொள்ளாமல் அசலான கிராமத்து அழகுகளை அள்ளித் தெளித்திருக்கிறார்.

பஞ்சாயத்துப் பாத்திரத்தில்

# களவாணி



கஞ்சா கருப்பு. அசர அடிக்கும் காமெடி. இளவரசும் சரண்யாவும் ரசிக்க வைக்கிறார்கள். பச்சை பசேல் தஞ்சை குளுமையை கேமரா அள்ளிப் பருக, இன்னும் இரண்டு பாட்டுக்கள் இருந்திருக்கலாமே என்ற ஏக்கத்தை எஸ்.எஸ்.குமரன் ஏற்படுத்தி விட்டார்.

மனசைக் களவாடும் - களவாணி

- துளசி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர் :
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்
தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899
ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com
இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

● க.கவிதா, நாகை

? ''சினிமா எடுப்பதை விட சி.டி. திருடர்களைத் தேடுவதே எங்களுக்கு வேலையா போச்சு'' என்று சுஹாசினி வருத்தப்படுகிறாரே?

! அதுக்குத்தான் தியேட்டரில் திரைப் படத்தை வெளியிடும்போதே ஹோம் தியேட்டர் வர்ஷனையும் வெளியிட வேண்டும் என்று சொல்கிறார்கள். டெக்னாலஜி ஓடும் வேகத்துக்கு, கூடவே ஓடவேண்டுமே அன்றி, காலில் கயிறைக் கட்டிக்கொண்டு தவிக்கக்கூடாது.

● கே.வி.ராமன், சென்னை-32

? உலகக் கோப்பை கால்பந்துப் போட்டியில் (2010) அர்ஜன்டைனாவும் பிரேசிலும் கால் இறுதிப் போட்டியில் தோல்விகளைச் சந்தித்து வெளியேறியதைக் குறித்து...?

! யானைக்கும் அடி சறுக்கும்; மாரடோனாவின் நம்பிக்கையும் தகரும்! வெற்றி-தோல்விகளை விட முயற்சிதான் முக்கியம் என்பதை மறவாமலிருந்தால் ''பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்'' என்பதன் முழுப் பொருள் புரியும்.

* விளையாட்டில்லை!

● எஸ்.ராமசாமி, வடக்குதயிர்பாளையம்

? வெளிநாட்டு அறிஞர்கள் பலர், தமிழ்மொழி பற்றி நன்கு ஆராய்ந்து கட்டுரைகள் அளித்துள்ளனரே (செம்மொழி மாநாட்டில்). உதாரணமாக, கொரிய மொழியில் ஐந்நூறு தமிழ்ச் சொற்கள் உள்ளதாக அறிஞர் ஜுங் நம்கிம் கூறினார். இது நமக்குப் பெருமைதானே?

! சந்தேகமென்ன! ஆனால், அந்தப் பெருமையை விட மாநாடு அதிக பெருமை கொள்ள முற்பட்டது, வடமொழிக்குத் தமிழ்தான் அண்ணன் என்று நிரூபிக்கும் முயற்சியில்தான்!

● ஜி.மகாலிங்கம், காவல்காரபாளையம்

? செம்மொழி மாநாட்

# 4 நிமிடங்களுக்கு கோடி தகுமா?

# நீங்கள் கேட்டவை தராசு

டில் கருத்தரங்கில் கலந்து கொண்டு பேசுவதாக வாக்குறுதி கொடுத்து விட்டு, அழைப்பிதழும் அச்சடிக்கப் பட்டு விளம்பரப்படுத்தப்பட்ட பிறகு, தாம் கலந்துகொள்ளாமல் ஜி.கே. மணியை மட்டும் அனுப்பி வைத்துவிட் டாரே ராமதாஸ்?

! அடுத்த முறை பா.ம.க.வுக்கு எம்.பி. ஸீட் கொடுக்கிறேன் என்று வாக்குறுதி அளித்துவிட்டு, கொடுக்காமல் போனாரே கருணாநிதி!

● பா.அச்சுதன், வயலூர்

? சமீபத்தில் படித்த புத்தகம்?

! எண்பது வயதைத் தாண்டிக் குதிக்கும் இளை ஞர் இந்திரா பார்த்தசாரதி யின் மொத்த சிறுகதை களையும் கொண்ட இரண்டு வால்யூம்கள். கிழக்கு வெளியீடு. அற் புதம். அவற்றில் அநேகம் கதைகள் கல்கியில் வெளி யானவை.

● கே.எஸ்.சுப்பிரமணியன், சென்னை-15 ❑

? புது டெல்லியில் நடக்க இருக்கும் காமன் வெல்த் விளையாட்டுப் போட்டியில், நான்கு நிமி டங்களுக்குத் தோன்ற ஐஸ்வர்யா ராய்க்கு நான்கு கோடி ரூபாயாம்! இது எப்படி இருக்கு?

! இதில் ஆச்சர்யப்பட என்ன இருக்கு? நமக்கு விளையாட்டை விட விளம்பரம்தானே சார் முக்கியம்!

● பேசா பொறுப்பு!



● மீறிய வாக்குறுதி



● இளமை எண்பது!



● கல்யாணி பாலு, திருநெல்வேலி

? "தமிழ் இவர் பாட்டன் வீட்டுச் சொத்து" என வைரமுத்துவால் அறிமுகப் படுத்தப்பட்ட கயல்விழி அழகிரியின் தமிழ் உச்சரிப்பை கவனித் தீர்களா? செம்மொழி மாநாட்டுக் கவியரங்கில் அவர் எப்படி அனுமதிக்கப் பட்டார்...?

! மாநாட்டில் முதல்வர் குடும்பத்தின் பங்கேற்பைத் திட்டமிட்ட அளவுக்கு, தமிழின் தரம் குறித்தோ கலையின் தரம் குறித்தோ யாரும் கவலைப்பட வில்லை. அதன் விளைவா கத்தான் எழிலரசியின் வீணைக் கச்சேரிக்கும் வாய்ப்பு கிட்டியது.

● நித்யா பாலாஜி, சென்னை-43

? சென்னை தி.நகரில், பட்டப் பகலில் எண் பத்திரண்டு லட்சம் ரூபாய் கொள்ளை... குலைநடுங்க வைக்கிறதே!?

! தமிழக சட்டம் ஒழுங்கு சீர்குலைந்து கிடப் பதற்கான தினசரி சான்று களில் முக்கியமான ஒன்று!

● இராம வேதநாயகம், வடமாதிமங்கலம்

? 11.7.2010 கல்கி இதழில் இ.சௌ.ராஜ் கேட்ட கேள்விக்கு கவிதை நடையில் பதிலளிக்கிருக்

**கிறீரே...? ஒரு புதுக்கவிதை தாருங்களேன் தராசு?**

! அடுத்த கேள்விக்கான பதிலைப் பாருங்க... புதுக் கவிதை இல்லைன்னாலும் கவிதை புதுசுதான்!

● **என்.பாலசுப்பிரமணியன், சென்னை-40**

**? 'ஓசோன்' மண்டலம் பாதிக்காமல் இருக்க தனி நபரின் பங்கு என்ன...?**

! அணைக்கலாம் அங்கொரு வீண் விளக்கை
மாறலாம் அசைவம் தவிர்த்து மரக்கறிக்கு
பருகலாம் பானை நீர் - ஃப்ரிட்ஜ் தவிர்த்து
மருகும் மண்டல ஓசோன் ஓரளவு காக்க.

✱ ஷாக் தோல்வி!



✱ சொத்துக் கணக்கு!



✱ வேஸ்ட் வருத்தம்!



● **என்.சண்முகம், திருவண்ணாமலை**

**? எம்.ஜி.ஆர்., ஜெ. ஆட்சிக் காலங்களிலும் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றது. அப்போது குறை சொல்லாத ஜெயலலிதா, இப்போது கலைஞர் நடத்திய மாநாட்டைக் குறை சொல்வது சரியா?**

! மாநாட்டை யாருமே குறைகூறவில்லை. மாநாடு நடத்தப்படும் முறையைக் குறைகூறுவோர் பலர் உண்டு. ஜெ. அவர்களில் ஒருவர். நியாயமான விமர்சனங்களை வரவேற்கும் மனப் பக்குவம் இருக்க வேண்டும். உதாரணமாக, அரசாங்கமே மாநாட்டை நடத்துவதற்கும் ஒரு சர்வதேச (தமிழ்மொழி) அமைப்பு நடத்த, அரசு அதற்கு ஆதரவு அளிப்பதற்கும் இடையே நிறைய வித்தியாசம் உண்டு.

● **சங்கீத சரவணன், மயிலாடுதுறை ★**

**? கடந்த ஆறு மாதங்களில் தமிழில் வெளியான முப்பதுக்கும் மேற்பட்ட படங்களில், மூன்று மட்டுமே வசூல்ரீதியாக வெற்றி என்கிறார்களே. காரணம் என்ன...?**

! திரைப்படங்களில் காட்சிக்குத் தரப்படும் முக்கியத்துவம், கதையின் புதுமைக்கும் வலிமைக்கும் தரப்படுவதில்லை என்பதே காரணம்.

● **எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்**

**? ஒபாமாவுடன் பெரிய விஷயங்கள் பற்றிப் பேசியதால் வாரன் ஆண்டர்சனை இந்தியாவுக்குக் கொண்டு வருவது குறித்துப் பேசவில்லை என மன்மோகன் சிங் கூறியுள்ளாரே?**

! கரெக்ட். கலைஞரிடம் ஸ்பெக்ட்ரம், ஒபாமாவுடன் ஆண்டர்சன்... என்று பேசக் கூடாத விஷயங்களில் பிரதமர் பொறுப் புணர்வோடு இருக்கிறார்.

**❑ ரூ.150 பரிசு பெறுபவர்:**
**கே.என்.சுப்பிரமணியன், சென்னை-15**

**✱ ரூ.75 பரிசு பெறுபவர்:**
**சங்கீத சரவணன், மயிலாடுதுறை**

# எருமையின் இளிப்பு

''நீதான் கதாநாயகி என்று,'' பஞ்ச கல்யாணி படத்தை இயக்கின சம்பந்தம் சார் சொன்னப்போ சந்தோஷம் கிர்னு ஏறியது. ''படத்தோட பேரு 'நேரம் நல்ல நேரம்'... உன்னோட இன்னொரு முக்கிய கதாபாத்திரமா நடிக்கப் போறது ஒரு எருமை மாடு...'' என்றாரே பார்க்கலாம். எல்லாம் என் நேரம்தான்னு நினைச்சுகிட்டேனே யொழிய சொல்லலை!

சுரணையே இல்லாதவங்களை 'எருமை!'ன்னு திட்டுவோம்... அப்படிப்பட்ட எருமைகூட நடிக்குமா? அதுக்கு நடிப்பு வருமா?... அதைத் தெரிஞ்சுக்கறதுக்காகவாவது அந்தப் படத்துல நடிக்கணும்னு முடிவு செஞ்சேன். ஷூட்டிங் சுவாரஸ்யம்னா அவ்வளவு சுவாரஸ்யம்! டைரக்டர் சொன்ன மாதிரி எருமை நடிச்சுதா, இல்லை அது நடிச்சதுக்கு ஏற்ப கதையை அவர் மாத்திக் கிட்டாரான்னு கடைசி வரை கண்டே பிடிக்க முடியலை!

ஒரு சீன்ல, வீட்டுக்குள் நாங்க சிரிச்சுப் பேசிக் கிட்டிருப்போம். அதைப் பார்த்து எருமையும் சந்தோஷமா சிரிக்கணும்னு டைரக்டர் சொன்னார்! சாத்தியமே இல்லாத ஒரு விஷயத்துக்காக அவர் நேரத்தை வீணடிக்கப் போறார்னு நாங்க பேசிக்கிட் டோம். ஒரு பக்கெட்டில் மண்ணெண்ணெயைக் கொண்டுவரச் செய்து எருமை முன்னால் வைக்கச் சொன் னார். காமெரா ஸ்டார்ட் ஆனதும், பாவம் எருமை... பக்கெட்டுக்குள் தலையை விட்டது. அதே வேகத்தில் பல்லை இளிச்சபடியே தலையைத் தூக்கியது; மூக்கை விறைத்தபடி அத்தனைப் பற்களும் தெரிய அது சுற்றிலும் பார்த்தது... டைரக்டர் கட் சொன்னார்!

அந்த நிமிஷம் எருமை 'சிரிச்ச' காட்சி படமானதைப் பார்த்து நாங்களும்தான் சிரிச்சோம். அப்புறமா தான் தெரிஞ்சது மண்ணெண்ணெய் வாடை பிடிக்காம முகஞ்சுளித்ததை நாம

சிரிப்புன்னு சொல்லிக்கிட்டோம்னு. ஆனா, யோசிச்சுப் பார்த்தா சொரணையில்லாத ஜீவன்கள், மனுஷங்களான நாமதான்னு தோணுது.

2

**மா**யாஜால சினிமா உலகத்துல விட்டலாச்சார்யா ரேஞ்சுக்குப் பிரபலமானவை ராமநாராயணன் சாரோட படங்கள். அவர் ஒரு படத்துல நடிக்க கூப்பிட்டார். ''ஸார், இந்தப் படத்துல பாம்பு, பல்லி, ஓணான்...?''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லைம்மா... பயப்படாதே...'' அப்புறம் ஒரு சின்ன சைலன்ஸ்... முகத்துல அப்பின கேள்விக்குறியோட நான். ''ஒரு புலிதான் நடிக்குது...'' என்றார், ஏதோ 'காப்பி சாப்பிடறாயா?' என்கிற மாதிரி.

# புலியின் மூச்சு!

நான் எழுந்துட்டேன்... ''சார் எனக்குப் பயம். வேண்டாம்...''

''புலிக்கும் உனக்கும் காம்பினேஷன் சீன் வராதும்மா...''ன்னார். அதை நம்பி ஒத்துக்கிட்டேன். கிளைமாக்ஸ் வரைக்கும் எடுத்தாச்சு. புலி என் ஷெட்யூல்ல வரவே இல்லை. கிளைமாக்ஸ் முடிஞ்சதும், ''எல்லாரும் அப்படியே சிரிச்சுக்கிட்டே நில்லுங்க...'' – ராமநாராயணன் ஸார்தான் - ''இப்போ புலி வரப் போகுது...''

அதோ! வந்தும்விட்டது.. காமெரா பக்கத்தில் புலி! அதன் பின்னாடியே ஒருத்தர். சின்ன பிரம்பை சுழற்றிக்கிட்டே புலியை 'ஓட்டிக்கிட்டு' வந்து எங்களுக்கு நடுவில் நிற்க வைச்சார். புலி வாசனைன்னா என்னன்னு தெரியுமா உங்களுக்கு...? அன்னிக்கு அந்தக் கணத்துல அதைத் தெரிஞ்சுக்கிட்டேன். அதோட மூச்சுக்காத்து வேற என் மேல படற தூரத்துல இருக்கு... புலி வாசனை



* 'நேரம் நல்ல நேரம்' படத்தில்...

என் மூக்கு வழியே நுழைகிறதா? இல்லை மூளை வழியேவா...? சினிமாவில் நடிப்பது வாழறதுக்கா? சாகறதுக்கா? எல்லார் மேலேயும் கோபம் கோபமாக வந்தது. 'பே!'ன்னு சத்தம் போட்டு அழ ஆரம்பிச்சேன்...

''ஷ்! நீ கையைக் காலை அசைச்சா அது மிரண்டுடும். சும்மா இரு'' - பக்கத்தில் விஜயகாந்த் ஸார் விரட்டினார். அவ்வளவுதான். என் அழுகை உச்சஸ்தாயிக்குப் போயிடுச்சு!

புலி மெதுவாகத் தலையைத் திருப்பி என்னைப் பார்த்தது... என் கண்ணிலிருந்து பொலபொலன்னு கண்ணீர். ஒருகணம்

ஊர்வசி

முறைக்கப் பார்த்த புலி என்ன நினைத்ததோ, ஓடிப்போய் தன்னோட கூண்டுக்குள்ளே உட்கார்ந்துட்டது! அதுக்கப்புறம் 'புலி மேனேஜர்' எத்தனை முயற்சி பண்ணியும் அதை வெளியே வரவழைக்கவே முடியலை! யாரோ சொன்னார்கள்: "புலிக்கு நாம பேசறது, நினைக்கறது எல்லாமே புரியுமாக்கும். இந்தப் பொண்ணு அழுததாலதான் அது வரமாட்டேங்குது!"

'வேங்கையின் மைந்தன்' படத்துல நடிச்ச அந்தப் புலி மனசுல என்ன எண்ணம் ஓடியிருக்கும்னு இப்போ யோசிச்சுப் பார்க்கறேன். 'மனுஷங்களால கூண்டுல அடைக்கப்பட்டு, அவங்க 'ஓடு'ன்னா ஓடணும்; 'ஆடு'ன்னா ஆடணும்... அவங்களுக்கு அடிபடாம கடிக்கணும். சாக்கு ஊசியால அவங்க என் வாயைத் தைச்சாலும் நிசப்தமா இருக்கணும்... இப்படியெல்லாம் ஆட்டுவிக்கப்பட்டு, தன் உணர்வுகளை வெளிப்படுத்த அந்த விலங்குக்கு அனுமதி மறுக்கப்பட்டிருந்தாலேயே அது என் உணர்வுகளைப் புரிஞ்சுக்கிட்டது போலும்... படிக்கணும்னு ஆசைப்பட்ட ஒரு மாணவி, திடீர் நட்சத்திரமாகி தன்னைப் போலவே ஆடுன்னா ஆடி, 'பாடு!'ன்னா பாடி... தன் மனத்தைப் பணையம் வைத்திருக்கிறாள் என்று அதற்குத் தெரிந்துவிட்டது. ஆமாம், அப்படித்தான் நான் நம்புகிறேன். மனிதனால் உணர முடியாத நுண் அதிர்வுகளை வாயில்லா பிராணிகள் மிக சூட்சுமமாக அறிந்துகொள்கின்றன. இது என் அனுபவத்தில் பலமுறை கண்ட உண்மை.



"பயத்தில் இருந்த என்னை ஒரு கணம் முறைச்சுப் பார்த்த புலி என்ன நினைத்ததோ, ஓடிப்போய் தன்னோட கூண்டுக்குள்ளே உட்கார்ந்துவிட்டது!"



பின்னே... எங்கள் வீட்டு அல்சேஷன் சக்கிக்கு எப்படித் தெரிந்தது - நண்பர்களோடு டூர் போகிறேன் என்று கிளம்பிப் போன என் சின்னத் தம்பி திரும்பியே வரமாட்டான் என்று?! இரண்டு நாட்கள் சக்கி ஒன்றுமே சாப்பிடாமல் படுத்துக் கிடந்தது. டாக்டர் வந்து இன்ஜெக்ஷன் போட்டபோது கண்ணை ஒரு பக்கமாகச் சாய்த்து பரிதாபமாகப் பார்த்தது. அந்த நோய்க்கான காரணம், மறுநாள் என் தம்பியோட சடலத்தைப் பார்த்தபோது தானே எங்களுக்குப் புரிஞ்சுது!

சக்கி மட்டுமில்லை; எங்கள் வீட்டில் செல்லப் பிராணிகள் நிறைய இருந்தன. கொஞ்சம் வண்ண வண்ணப் பஞ்சுப் பொதிகளாக லவ் பேர்ட்ஸ், முயல், நாய், புறா... 'என் குடும்பமும் இதர விலங்குகளும்' (My Family and Other Animals) அப்படின்னு ஜெரல்ட் டர்ரல் (Gerald Durrel) எழுதிய புத்தகம் மாதிரி தான்!... எங்க வீட்டிலே ஒரு கிளி... அது ஒரு பெரிய அபாயத்திலிருந்து என்னைக் காப்பாத்தியிருக்கு...

படம்: **ஸ்ரீஹரி**

ஸ்டில்ஸ் உதவி : **'ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்**

**(தொடரும்)**

# ஊர்வசி போட்டி சில்க் சாரி!



## மாதம் 3 புடைவைகள் பரிசு!

*வாசகர்களே!*

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவை பரிசு பெறுவார்கள். தொடரின் **இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

ஜூலை மாத கூப்பன்களை இணைத்து அனுப்ப கடைசித் தேதி : 07.08.10

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**

கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

---

பெயர் : ..............................................

முகவரி : ..............................................

..............................................

..............................................

........................பின்கோடு:..................

தொலைபேசி : ..............................................

இ-மெயில் :

ஜூலை - 2

**ஊர்வசி வீட்டில் வளர்த்த செல்லப் பிராணி?**

*விடையை டிக் செய்யவும்*

- ☐ எருமை
- ☐ புலி
- ☐ சக்கி
- ☐ பாம்பு

ஸ்ரீ கிருஷ்ணகான சபா அதன் நிறுவனர் யக்ஞராமனின் நினைவாக ஆண்டுதோறும் ஜூலையில் சிறப்பு நிகழ்ச்சிகள் வழங்குகிறது. இவ்வாண்டு 'யக்ஞராமன் வாழ்நாள் சாதனை யாளர் விருதி'னைப் பெற்றவர் சங்கீத மேதை டாக்டர் பாலமுரளிகிருஷ்ணா. சிறப்பு விருது களைப் பெறும் மற்ற இருவர், பாடகர் சிக்கில் குருசரண் மற்றும் நடனக் கலைஞர் ஷிஜித் கிருஷ்ணா. அவர்களைப் பற்றிச் சில தெரியாத செய்திகள் இங்கே....



✸ மங்களம்பள்ளி பாலமுரளி கிருஷ்ணா பிரான்ஸ் தேசத்தின் உயர் விருதான செவாலியே விருதினைப் பெற்ற ஒரே கர்நாடக இசை வித்துவான். ✸ எட்டு வயதில் கச்சேரி மேடை ஏறிய இந்த சைல்ட் பிராடிஜியின் பெற்றோரும் இசைக் கலைஞர்களே. ✸ கர்நாடகச் சங்கீதத்தின் ஆதாரமான 72 மேளகர்த்தா ராகங்களிலும் பாடல்களை பாலமுரளி கிருஷ்ணா இயற்றி எல்லோரையும் வியக்க வைத்தபோது அவருக்கு வயது பதினைந்துதான். ✸ அவரே பல ராகங்களை உருவாக்கி அவற்றில் கிருதிகள், தில்லானாக்கள் இயற்றியிருக்கிறார். அவரால் உருவாக்கப்பட்ட ஒரு பிரபலமான ராகம் மஹதி. மஹதி என்ற அதிசய ராகத்திற்கு நான்கு ஸ்வரங்களே. அந்த நான்கு ஸ்வர ராகத்தை பலரும் கேட்டு மகிழும்படி செய்தது 'அபூர்வ ராகங்கள்' படத்தில் வரும் 'அதிசய ராகம், ஆனந்த ராகம்' பாடல். ✸ சமீபத்தில் ஜெயா டி.வி. நடத்திய 'கர்நாடிக் ஐடில்' இறுதிச் சுற்றுக்கு பல இசைக் கலைஞர்களுடன், அவரும் சிறப்பு நீதிபதியாக வந்து கலந்து கொண்டபோது பல போட்டிச் சுற்றுகளின் இறுதியில் அவர் சிரித்துக் கொண்டே சொன்னது: 'நல்ல வேளை... நான் இந்தப் போட்டியில் கலந்து கொள்ள வில்லை...'



# நல்ல வேளை நான் கலந்து கொள்ளவில்லை!

# தெரிந்ததும் தெரியாததும்

**சிக்கில் குருசரண**

★ சமீபத்தில் திருமணம் செய்து கொண்ட குருசரணின் இளம் மனைவி ஜனனி 'ஜர்னலிஸம்' மாணவி. ★ அப்பா சந்துரு மேடை நாடக நடிகர். தேவன் அறக்கட்டளை விருது பெற்றுள்ளார். ★ குருசரணின் குரலில் இளையராஜா ஒரு பாடலைப் பதிவுசெய்து இருக்கிறார். என்ன படம், எந்தப் பாடல் என்பது வெளிவந்தால்தான் தெரியும். ★ சினிமாவில் அதிக ஆர்வம். மிகவும் பிடித்த நால்வர் கமல்ஹாசன், இளையராஜா, கவுண்டமணி, செந்தில். இதில் முதல் 3 பேரையும் பார்த்துப் பேசியுள்ள சரண் இன்னும் செந்திலைப் பார்த்துப் பேசியதில்லையாம்.

பின்னணியில் நுழைந்து முன்னணி திரைக் கலைஞராகத் திட்டமுண்டா சரண்?

- தேவவிரதன்



**நடனக் கலைஞர்**
**ஷீஜித் கிருஷ்ணா**

★ கேரளாவில் கன்னூரில் பிறந்து வளர்ந்த ஷீஜித் கிருஷ்ணாவின் பெற்றோரும் நடனக் கலைஞர்களே. அப்பா பாலகிருஷ்ணன் பரதம் மற்றும் கிராமிய நடனக் கலைஞர். அம்மா மனோரமா பரதம் மற்றும் மோகினியாட்டத்தில் தேர்ச்சி பெற்றவர். அவர்கள் இன்றும் அங்கு நடத்தும் நடனப் பள்ளியின் பெயர் 'நூபுரம்' (சதங்கை).

★ மிருதங்க வித்துவானாக வேண்டும் என்று கலாக்ஷேத்ராவில் வந்து சேர்ந்த ஷீஜித் வெளிவந்தது நடனக் கலைஞராக. ஆனாலும், அவருக்கு மிருதங்கம், பாட்டு, கடம் இவற்றிலும் தேர்ச்சி உண்டு.

★ மேற்கத்திய இலக்கியத்தின் கருவை பரதத்துடன் இணைத்து நடன நாடகமாக (ballet) வழங்கிய பெருமை ஷீஜித்திற்கு உண்டு. அலெக்ஸாண்டர் டுமாஸ் எழுதிய 'Man in the Iron Mask' இவரது தயாரிப்பில் 'மாஸ்குரேட்' (Masquerade) என்ற பெயரில் அரங்கேறியது - பாராட்டுப் பெற்றது.

★ எதிர்-எதிரான குணாதிசயங்கள் கொண்ட கதாபாத்திரங்களை ஏற்று அநாயாசமாக மேடையில் அசத்தியவர் ஷீஜித். ராமன்-ராவணன், துரியோதனன்-கிருஷ்ணன் என்று இவர் மேடையில் சடுதியில் மாறிக் காட்டியதைப் பார்த்துப் பாராட்டாதவர் இல்லை.



# கல்கி



2010 ஜூலை 18
விக்ருதி ஆடி 2
மலர் : 68
இதழ் : 51

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா — *பாரதியார்*

## வதைக்கும் விலை உயர்வு!

பெட்ரோலியப் பொருட்களின் விலை உயர்வை எதிர்த்து ஜூலை 5 அன்று பந்த் நடத்தியதால் பொதுமக்கள் எவ்வித நலனும் அடையவில்லை. மாறாக, அவர்களுக்கு இடையூறும் துன்பமும்தான் ஏற்பட்டன. உற்பத்தி, வியாபாரம், பணப் பரிவர்த்தனை நின்று போனதால் பல்லாயிரம் கோடி ரூபாய் தேசிய நஷ்டம் வேறு!

எதிர்க்கட்சியினர் தங்கள் வாதத் திறனாலும் ஒற்றுமையினாலும் மக்களுக்கு உதவியிருக்க முடியும். பெட்ரோலிய நிறுவனங்களுக்கு உண்மையில் நஷ்டம் ஏதும் இல்லை. பெட்ரோல் டீசல் விலையில் அவை இழக்கக்கூடிய தொகையை, இதர உதிரி உற்பத்திப் பொருட்களின் (நாஃப்தா, தார் போன்ற பல) விற்பனை மூலம் ஈடுகட்டுவதுடன் லாபமும் ஈட்டுகின்றன.

உணவு தானியம் முதல் உரங்கள் வரை பலவிதமான பொருட்களுக்கு மானியம் வாரி வழங்கும் அரசு, பெட்ரோலியப் பொருட்களுக்கான மானியத்தை மட்டும் சுமையாகக் கருதுவது ஏற்கக் கூடியதல்ல. அரசின் பல வீண் செலவினங்களும் பயன் தராத கண்துடைப்பு 'சமூகநலத் திட்டங்களும்' கரைக்கும் நிதியை மிச்சப்படுத்தி, பெட்ரோலியப் பொருட்களுக்கான மானியத்தைத் தொடர்வது சாத்தியமே.

'மலிவு விலை அரிசிக்குத் தரப்படும் மானியம் ஏழைக்கு உதவுகிறது. பெட்ரோல் டீசல் பயனீட்டாளர்களோ பணக்காரர்கள், அவர்களுக்கு அரசு ஏன் உதவ வேண்டும்?' என்கிற வாதம் சரியல்ல. நாட்டில் பெட்ரோலைப் பயன்படுத்தி ஓடும் கார்களை

## உயர் கல்வியின் பரிணாம வளர்ச்சி!



விட, இரு சக்கர வாகனங்களே மிக அதிகம். அவற்றின் உரிமையாளர்கள் மத்திய - கீழ் மத்தியதர வகுப்பினர்தான். மேலும், கார், வேன் போன்றவற்றை உபயோகிப்போர், பெரும்பாலும் தங்கள் அலுவலகக் கணக்கில்தான் அவற்றை வாங்கி பராமரிக்கின்றனர். பெட்ரோல், டீசலுக்கு ஆகக்கூடிய கூடுதல் செலவை தங்கள் உற்பத்திப் பொருள் மீது ஏற்றி, விலைகளை இவர்கள் கூட்டி விடுவார்கள். பயனீட்டாளர்களான சராசரி மக்கள் மீதுதான் இறுதிச் சுமை ஏற்றப்படும்! சரக்குக் கட்டணங்கள் உயர்வதால் உணவுப் பொருட்களின் விலையும் கடுமையாக உயரும். இதனால் பொதுமக்களுக்கே வதை!

ஒருங்கிணைந்த இயக்கமாக அனைத்து எதிர்க்கட்சியினரும் சேர்ந்து, மேற்படி விஷயங்களையெல்லாம் எடுத்துக்கூறி விழிப்புணர்வு ஏற்படுத்துவது; பெட்ரோலியப் பொருட்களின் சிக்கனமான பயன்பாட்டுக்கும் அரசு செலவுகளைக் குறைக்கவும் யதார்த்த நோக்கிலான திட்டங்களை வரைவது என்று எவ்வளவோ வகைகளில் மக்களுக்கும் நாட்டுக்கும் உதவலாம். இதன் மூலம் மத்திய அரசு, பெட்ரோலியப் பொருட்களின் விலையைக் குறைக்க நிர்ப்பந்திக்கப்படும்.

அவ்வளவு ஏன், எதிர்க்கட்சிகளும் சரி காங்கிரஸ் மற்றும் அதன் ஆதரவுக் கட்சிகளும் சரி, தாங்கள் ஆளும் மாநிலங்களில் பெட்ரோலியப் பொருட்கள் மீதான வரியைக் குறைத்து, முன்னுதாரணமாக விளங்கலாமே. அது பொதுமக்களுக்குப் பேருதவியாக இருக்குமே! உயர்த்தப்பட்ட விலைமீதான வரி என்பதால், வரி விகிதம் குறைவதன் மூலம் அரசுக்கு வருவாய் குறையாது.

எனினும், மத்திய-மாநில அரசுகள் இதைச் செய்யத் தயாராயில்லை. காங்கிரஸின் தோழமைக் கட்சியோ, எதிர்க்கட்சியோ - எதுவாயினும், விலை உயர்வை ஏற்காதது போல் ஒரு பக்கம் நடித்து விட்டு, மறுபக்கம் கூடுதல் வருமானத்தை அள்ளிக் கொண்டுதான் இருக்கின்றன! இந்த இரட்டை வேடமும் வெற்று வார்த்தை ஜாலமும், பெட்ரோலியப் பொருட்கள் விலை உயர்வோடு சேர்ந்து நம்மைக் கூடுதலாக வதைப்பதுதான் மிச்சம்!

# கல்கி

25.07.2010 இதழில்



அடுத்த வாரம்...

## விருதுநகர் மாவட்ட ஸ்பெஷல்

- விருதுநகர் வொர்ஸ்ட்... ராஜபாளையம் பெஸ்ட்!
- சீக்ரெட் அஃப் சிவகாசி!
- வருமா, வருஷநாட்டுக்குப் பாதை!
- திருத்தங்கல் நாயகன்...
- இருக்கன்குடி நாயகி...

இந்த இதழோடு 32 பக்க இணைப்பு

## வில்லிப்புத்தூர் வைபவம்

படிக்கத் தவறாதீர்கள்...

சுவாரஸ்யத் தகவல்களுடன் தயாராகிறது!

# காங்கிரஸைக் கலக்கும் தவ்ஹீத் ஜமாஅத்

# பத்து சதவிகிதம்

தமிழக முஸ்லிம்கள் மத்தியில் தமிழ்நாடு தவ்ஹீத் ஜமா அத் அமைப்புக்குக் கணிசமான செல்வாக்கு உண்டு. பொதுவாக வீட்டை விட்டு வெளியே வருவதற்கே தயங்கும் முஸ்லிம் பெண்கள், தவ்ஹீத் அமைப்பு, போராட்ட அழைப்பு விடுத்தால் ஆயிரக்கணக்கில் வந்து கூடுகிறார்கள். மற்ற சில முஸ்லிம் அமைப்புகளால் அவ்வளவு சிநேகத்துடன் பார்க்கப்படாத இந்த தவ்ஹீத் அமைப்பு, சமீபத்தில் சென்னையில் பேரணியும் மாநாடும் நடத்தியது. லட்சக்கணக்கான முஸ்லிம்கள் சென்னையில் அணிவகுத்தனர். வெற்றிகரமாக மாநாடு நடந்த மகிழ்ச்சியில் இருந்த இதன் நிறுவனர் பி.ஜெய்னுல் ஆபிதீனைச் சந்தித்தோம்...

**எதற்காக இந்த மாநாடு?**

கல்வி மற்றும் வேலைவாய்ப்பில் முஸ்லிம்களுக்கு பத்து சதம் இடம் ஒதுக்கப்பட வேண்டும் என்று நீதிபதி ரங்கநாத் மிஸ்ரா செய்துள்ள பரிந்துரையை பாராளுமன்றத்தில் உடனடியாக ஐ.மு. அரசு சட்டமாக்க வேண்டும். அதை வலியுறுத்தவே இந்த மாநாடு. கிட்டத்தட்ட 16 கோடி முஸ்லிம்கள் இந்தியாவில் இருக்கிறார்கள். வெள்ளையர்கள் இந்தத் தேசத்தை ஆண்ட போது கூட முஸ்லிம்களுக்குத் தனி இடஒதுக்கீடு கொடுத்திருந்தார்கள். சுதந்திரப் போராட்டத்தில் காந்தியின் அழைப்பை ஏற்று படிப்பையும் வேலையையும் உதறிவிட்டுக் கலந்து கொண்டவர்கள் முஸ்லிம்கள். ஆனால், சுதந்திரம் பெற்றவுடன் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த இடஒதுக்கீடு பறிக்கப்பட்டது. அன்று பாகிஸ்தான் பிரிந்த நிலையில் எங்கள் நிலையைப் பற்றிப் பேசுவதற்கு நாதியில்லை. இன்று என்ன நிலை? இந்த 16 கோடி பேரில் பட்டதாரிகள் மூன்றரை சதம்தான். 65 சதம் பேர் ஐந்தாம் வகுப்பு






வரை மட்டுமே படித்தவர்கள். கல்வியில் இவ்வளவு பிற்பட்ட நிலை என்றால் வேலை வாய்ப்பில் இன்னமும் கேவலம். ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். பணிகளில் மூன்றே சதம் தான் முஸ்லிம்கள். இடஒதுக்கீடு இல்லாத காரணத்தால் எங்கள் சமுதாய இளைஞர்கள் இன்று அரபு நாடுகளில் பாலைவனத்தில் கடைமட்ட வேலை பார்க்கும் அவலநிலை. நீதிபதி ராஜேந்திர சச்சார் எங்கள் சமூக, பொருளாதார பிற்பட்ட நிலையை மிகத் தெளிவாக விளக்கி அறிக்கைக் கொடுத்திருக்கிறார். அந்த அடிப்படையில் நீதிபதி ரங்கநாத் மிஸ்ரா முஸ்லிம்களுக்கு பத்து சதம் இடஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று மத்திய அரசுக்கு பரிந்துரை செய்திருக்கிறார். 2004-ஆம் ஆண்டு தேர்தலின் போது, ''நாங்கள் ஆட்சிக்கு வந்தால் முஸ்லிம்களுக்குத் தனி இடஒதுக்கீடு அளிப்போம்'' என்று தேர்தல் அறிக்கையில் காங்கிரஸ் சொன்னது. அதை நம்பி நாங்கள் காங்கிரஸுக்கு வாக்களித்தோம். எங்களுக்கு இடஒதுக்கீடு அளிக்கும் தார்மிகப் பொறுப்பு மத்திய அரசுக்கு இருக்கிறது. இனியும் பொறுக்கமாட்டோம். குட்டக் குட்டக் குனிய மாட்டோம்.

**மதரீதியாக இடஒதுக்கீடு செய்ய சட்டம் இருக்கிறதா?**

## மாறுபட்ட மேடை

- மேடையில் தெரிந்த, பிரபலமான தலைவர்கள் யாரும் கிடையாது. தலைவர்களின் படங்களும் கிடையாது.
- ''அவர்களே... இவர்களே'' என்று யாரும் நீட்டி முழக்கி பேசத் தொடங்கவில்லை. எல்லோரும் நேரடியாக சப்ஜெக்ட்டுக்கு வந்தார்கள்.
- கூட்டத்தில் தொலைந்து போன சிறுவர்களையும் சிறுமிகளையும் மேடைக்குக் கொண்டு வந்து லைவ்-ரிலே... குளோசப்பில் காண்பித்துக் கொண்டிருந்தார்கள்.
- கூட்டம் நடக்கும்போது மழை வலுத்தது. ஒரு சலசலப்பும் காட்டாமல் எல்லோரும் அமைதியாகப் பேச்சைக் கேட்டுக்கொண்டு இருந்தார்கள்.
- காங்கிரஸ் எம்.பி. ஜே.எம்.ஆரூண் பார்வையாளராக வந்திருந்தார். ''இறுதியில் பேசிய ஜெய்னுல் ஆபிதீன் மிக நேரடியாகவே இடஒதுக்கீடு தந்தால்தான் காங்கிரஸுக்கு வோட்டு; இல்லையேல் தோற்கடிப்போம் என்று பேசியது துணிச்சல்தான்.

# தந்தால்தான் வோட்டு !



## போவோமா ஊர்கோலம்!

● மதியம் மூன்று மணிக்குத்தான் பேரணி துவங்கும் என்று அறிவிக்கப் பட்டிருந்தாலும், ஒரு மணிக்கே லட்சக் கணக்கில் ஆண்களும், பெண்களும், அண்ணா சாலை, பெரியார் சிலையருகே திரண்டு விட்டார்கள்.

● கட்டுப்பாடு என்றால் அப்படி ஒரு கட்டுப்பாடு. தவ்ஹீத் அமைப்பின் தொண்டர்கள் சொன்னபடி சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை அணிவகுத்தது ஆச்சர்யம்.

● ராமநாதபுரம் பணகுடி கிராமத்திலிருந்து வந்திருந்த சஜாத் சாதாரண டைலர். "இந்தப் பேரணிக்கு வர வேண்டுமென்று ஆறு மாதம் பணம் சேர்த்து வேனுக்கு கட்டினேன்" என்றார். கூட்டி வந்த கூட்டமல்ல, தானாக லட்சிய வெறி கொண்ட கூட்டம் என்று பலரிடம் பேசும்போது தெரிந்தது.

● பொதுவாக மாநாடு, பேரணி என்றால் அருகிலிருக்கும் டாஸ்மாக் கடையில் வியாபாரம் களைகட்டும். ஆனால் தவ்ஹீத் மாநாட்டுக்கு வந்திருந்த தொண்டர்கள் ஒருவர் கூட தடம் மாறாமல் ஊர்வலம் மற்றும் மாநாட்டில் கலந்து கொள்வதை மட்டுமே கடமையாகக் கொண்டிருந்தார்கள். சிகரெட், பான்பராக் பயன்படுத்துபவர்களைக் கூட பார்க்க முடியவில்லை. அவ்வளவு ஒழுக்கம்.

● நடமாடும் மெகா ஸ்க்ரீன், நடமாடும் கழிப்பறை என்று பெரிய கட்சிகள் செய்யும் வசதிகளும் உண்டு. தொழுகை நடத்த தனி இடம் ஒதுக்கப் பட்டிருந்தது.

● தவ்ஹீத் ஜமா அத்தின் வலைத் தளத்தில் நேரடி ஒளிபரப்பு வேறு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

''இந்து சமயத்தில் தலித்துகள், பிற்பட்டவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு இடஒதுக்கீடு கொடுக்கப்பட்டிருக்கிறதே! அதே போல் முஸ்லிம்களில் பிற்பட்டவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு தனி இடஒதுக்கீடு கொடுக்க வேண்டும். சட்டரீதியாக எந்தத் தடையும் இல்லை என்று நீதிபதி ரங்கநாத் மிஸ்ரா தெளிவாகவே கூறியுள்ளார்.

காங்கிரஸ் கொடுக்காவிட்டால், தேர்தலில் அதைத் தோற்கடிப்போம். கொடுத்தால் வோட்டு; இல்லையேல் வேட்டு. முஸ்லிம்கள் இனி யாரை நம்பியும் ஏமாறத் தயாராக இல்லை. அதே போல் எந்தக் கட்சியும் - தி.மு.க. உட்பட - ''இஸ்லாமியர் வோட்டு எங்களுக்கு மட்டும்தான்,'' என்று இனி உரிமை கொண்டாட முடியாது. சமுதாயத்துக்கு நன்மை செய்பவர்களுக்கே வோட்டு.

**நீங்கள் கேட்பது இடைக்காவிட்டால், காங்கிரஸை ஆதரிப்பீர்களா?**

''தமிழகத்தில் பிற்பட்டவர்களுக்குக் கொடுக்கப்பட்ட 30 சதவிகிதத்தில், மூன்



றரை சதவிகிதம் முஸ்லிம்களுக்கு, உள் ஒதுக்கீடு செய்த முதல்வருக்கு நன்றி சொல்கிறோம். அதே சமயம் அதை ஏழு சதமாக்க வேண்டும். மேலும், கருணாநிதி நினைத்தால் ரங்கநாத் மிஸ்ராவின் பரிந்துரையை அமுல்படுத்த, மத்திய அரசை நிர்ப்பந்திக்க முடியும். ஏதோ, கடமைக்குக் கடிதம் மட்டும் எழுதாமல் உண்மையாகவே கருணாநிதி முயற்சி செய்ய வேண்டும். வரும் சட்டமன்றத் தேர்தலுக்குள் காங்கிரஸ் அரசு இடஒதுக்கீடு சட்டம் போடவில்லையென்றால் நாங்கள் எடுக்கும் முடிவு காங்கிரஸ் - தி.மு.க. கூட்டணிக்குக் கணிசமான பாதிப்பை ஏற்படுத்தும். 2006 தேர்தலில் கலைஞர் முழு மெஜாரிட்டி பெறாததற்கும் ஜெயலலிதா, கணிசமான இடங்களைப் பெற்று எதிர்க்கட்சியாக வந்ததற்கும் எங்கள் நிலைப்பாடுதான் காரணம்.

**மற்றொரு அமைப்பான தமிழக முஸ்லிம் முன்னேற்றக் கழகத்தின் தலைவர் ஜவாஹிருல்லாவைக் கேட்டபோது...**

''அகில இந்திய அளவில் சிறுபான்மையோர் கூட்டமைப்பு ஒன்று இடஒதுக்கீட்டுக்காக போராட தில்லியில் அமைக்கப் பட்டிருக்கிறது. அதில் த.மு.மு.க.வும் ஒரு உறுப்பினர். இடஒதுக்கீடு விஷயத்தில் காங்கிரஸ் துரோகம் செய்தால் மன்னிக்க மாட்டோம்.''

**இந்தப் பொதுவான கோரிக்கைக்காக மற்ற முஸ்லிம் அமைப்புகளுடன் சேர்ந்து ஏன் போராடக் கூடாது?**

''மற்ற அமைப்பாளர்கள் எங்கள் சமுதாயத்தை அடகுவைத்து கூட்டணியில் ஒன்றிரண்டு இடங்களைப் பெறுபவர்கள். எங்களுக்குப் பதவி தேவையில்லை. அரசியல் பொறுப்பு எதுவுமில்லாமல்தான் கும்பகோணத்தில் நாங்கள் நடத்திய போராட்டத்தைப் பார்த்து மூன்றரை சதம் கொடுத்தார் கருணாநிதி. சமுதாயம் எங்களோடுதான் இருக்கிறது என்று எல்லாக் கட்சிகளுக்கும் தெரியும்.''

**- ப்ரியன்**

படங்கள்: **பேஜர் கிருஷ்ணமூர்த்தி**





# கிரேஸியைக் கேளுங்கள்

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

**நயாகரா, வயாகரா ஒப்பிடவும்?**

நயாகரா FALLS. வயாகரா FALSE. இரண்டும் இதயத்தை ஸ்தம்பிக்க வைக்கும்!

● கமலா ராஜசேகரன், பொள்ளாச்சி

**வாழ்த்துகள், வாழ்த்துக்கள் எது சரியான வார்த்தை?**

வாழ்த்துகள் சரி. அதிக வாழ்த்துகள் போதை ஏற்றும் வாழ்த்துக்''கள்'' ஆகிவிடும். ''க்''கு போட்டால் ''கிக்''கு!

● ஸ்வேதா, பெங்களூர்

**என்னதான் கால்களுக்குப் பாதுகாப்பாக இருந்தாலும் செருப்பை பீரோவில் வைக்க முடியுமா. காலுக்கு சொன்னா மாதிரி தலைக்கு ஒண்ணு சொல்லுங்க பாப்போம்?**

என்னதான் ''மல்லிப்-பூ'' மாதிரி இருந்தாலும், கடச்சுட இட்லியைத் தலையில் சூடிக் கொள்ள முடியுமா....!

● சுந்தரி ராமசந்திரன், சிதம்பரம்

**நீங்கள் ஜனநாயகவாதியா?**

ஆமாம். நான் demo "CRAZY"தான்!

● எஸ்.கோபாலன், நங்கநல்லூர்

**நாலு கழுதை வயசுங்கறாங்களே. அது என்ன வயசு?**

நெகடிவ்வா பாத்தா கெட்டுக் ''குட்டிச்-சுவரான'' வயசு. பாஸிடிவ்வா பாத்தா ''கிக்கான'' நாய்க் குண நாப்பது வயசு. அம்பதுல கழுதை தேஞ்சு கட்டெறும்பாகிவிடும்!

● ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி

**நமக்கு அதிக உதவியாய் இருப்பது வலக்கரமா இல்லை இடக்கரமா?**

எனக்கு WRITE - HAND!

● தேவராஜன், அரக்கோணம்

**பெண்களின் இடையைப் பார்த்தால் மட்டும் மயக்கம் வருகிறதே?**

அதுதான் HIP - NAUGHTY யிசம்....!

● கு.பொருணை பாலு, திருநெல்வேலி

**காலத்தால் அழியாத காதல் காவியம் என்று எதைச் சொல்வீர்கள்?**

கடவுள் மீது காதலாகிக் கசிந்து, அவருக்காக வாழ்வையே துறந்து காவியை ஏற்பது காவியம்!

● கே.ஆர்.ரவீந்திரன், சென்னை

**மனைவியை கைக்குள் போட்டுக் கொள்ள என்ன செய்ய வேண்டும்?**

கைக்குள் போட்டுக்க வசதியாக கர்சீப் இல்லை பொடி மட்டையைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்....!

## குட்டிச் சுவரான



• மு.மதிவாணன், அரூர்

*ரசத்தில் உயர்ந்த ரசம் எது?*

எவ்வளவு உயர்ந்தாலும் எல்லோரையும் ஒன்றாக பாவிக்கும் வள்ளலாரின் சம'ரசம்'!

• எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

*''நாளை முதல்'' என்பவன் சோம்பேறி ''இன்றிலிருந்து'' என்பவன் சுறுசுறுப்பு....உண்மைதானா?*

''நேற்று வரை'' உண்மைதான்....!

• V.பெரியசாமி, அரியலூர்

# வயசு!

*அம்மா - மனைவி இருவரிடமும் நல்ல பெயர் எடுப்பது எப்படி....?*

இதுதான் ''கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை'' என்பது. சத்தம் போடாமல் ''ஸ்டிரா'' வைத்து உறிஞ்சுங்கள்!

• M.ஜெய்ஸ்ரீ, சேலம்

*தாங்கள் பேனா பிடிக்காமல் கிரிகெட்-பேட் பிடித்திருந்தால்....?*

'தோனி' ஆகவும் ஆகியிருக்கலாம். 'போணி' ஆகாமலும் போயிருக்கலாம்....!

• க.கோபி, கிருஷ்ணகிரி

*மனைவியிடம் அடங்கிப் போவதா? அல்லது அவளை அடக்கி ஆள்வதா....?*

பூவா-தலையா போட்டுப் பாருங்கள். பூ விழுந்தால் அடங்கிப் போங்கள். தலை விழுந்தால்....ஏன் ரிஸ்க்....தலை விழாமல் பார்த்துக் கொள்ளுங்களேன்....!

• ராணி, வேலூர்

*பெட்ரோல் பிரச்னை தீர மாற்று வழி இருக்கா?*

இருக்கு. ஆனா அது சுத்து வழி. நடந்து வேற போகணும்!



செம்மொழி மாநாடு பரபரப்பில் செய்தித் துறை அமைச்சர் பரிதி இளம்வழுதி முயற்சியின் பேரில் வெளியான "செம்மொழிச் சிறப்புகள்" என்ற புத்தகம் பலரது கவனத்தைக் கவராததில் வியப்பில்லை. தமிழுக்காகப் பாடுபட்ட 113 அறிஞர்கள் குறித்த வரலாற்றை அழகாகத் தொகுத்துத் தந்திருக்கிறார்கள். இந்த வகையில் அமைச்சருக்கு உதவியவர் எழுத்தாளர் அஜயன் பாலா.



• சேகர் பாபு



• உமா சங்கர்

"வேண்டாத பெண்டாட்டி கை பட்டால் குற்றம்" என்ற சொலவடை உண்டு. ஐ.ஏ.எஸ். அதிகாரி உமாசங்கர் நிலைமையும் அதுதான். அவர் பழிவாங்கப்படுவது குறித்து, 'கல்கி'யில் எழுதிய பின்னர் சின்ன விஷயங்களில் கூட அவரைக் கடுப்படிக்கிறார்களாம். சமீபத்தில் கார் வாங்குவதற்கு அரசின் கடன் கேட்டிருக்கிறார். விண்ணப்பத்தையும் பந்தாடுகிறார்களாம்.

# அ.தி.மு.க.

ஜெயலலிதா அறிவிக்கும் போராட்டங்களை அசத்தும் அளவுக்குச் செய்து காட்டுபவர் அ.இ.அ.தி.மு.க. வடசென்னை செயலாளர் சேகர்பாபு. "ஆனால் ஜெயலலிதா தோழமைக் கட்சிகளையும் சேர்த்து போராட்டம் செய்யச் சொன்னால், இவர்களிடம் எந்தத் தகவலும் சொல்வதில்லை" என்கிறார் வடசென்னை ம.தி.மு.க. தோழர். ஆனால் மறுநாள் பத்திரிகைகளில் தோழமைக் கட்சியினரும் கலந்து கொண்டதாக படத்துடன் செய்தி

# பாலிடிக்ஸ் பஜார்

வருமாம். இது என்ன ரகசியம்? சேகர்பாபு அ.இ.அ.தி.மு.க. தொண்டர்களையே தோழமைக் கட்சிகளின் கொடிகளையும் எடுத்துக் கொண்ட வரச் சொல்லி விடுவாராம். அப்படிப் போடு! "தோழமைக் கட்சிகளை விடுங்கள். வடசென்னைப் பகுதியில் எங்கள் முக்கியப் பிரமுகர் முன்னாள் அமைச்சர் ஜெயகுமாருக்கே மாவட்டச் செயலாளர் எந்தத் தகவலும் சொல்வதில்லை" என்கிறார்கள் ராசிபுரம் அ.தி.மு.க. தொண்டர்கள்.

**வி**டுதலைச் சிறுத்தைகள் சார்பில் நின்று வெற்றி பெற்று சட்டமன்ற உறுப்பினரானார் செல்வப் பெருந்தகை. பின்னர் திருமாவளவனுடன் கருத்து வேறுபாடு ஏற்பட, பகுஜன் சமாஜ் கட்சியின் தமிழகத் தலைவரானார். இப்போது அதிலிருந்தும் அவரை நீக்கி விட்டார்கள். அடுத்த பயணம் காங்கிரஸை நோக்கியாம். மூன்று மாதமாக கார்த்தி சிதம்பரத்தோடு அதிக நெருக்கம் காட்டி வருகிறாராம் செல்வப்பெருந்தகை. ஆனால், எத்தனை தாவல்கள் இருந்தாலும் கொஞ்சம் கூட வெட்கப்படாமல் எம்.எல்.ஏ. பதவியைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டிருக்கிறார் செல்வப் பெருந்தகை.

* கார்த்தி சிதம்பரம்

# ரகசியம்!

* பரிதிஇளம்வழுதி

**செ**ம்மொழி மாநாடு ஒரு பக்கம் தடபுடலாக நடந்து முடிய கருணை மிக்க அந்தத் தனியார் பல்கலைக் கழகத்தை தமிழகத்தின் முதன்மை குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் வாங்கி விட்டதாகக் கோவையில் பரபரப்பாகப் பேசப்படுகிறது.

– சஞ்சயன்

புனைவொன்று செதுக்கிய
வடிவத்தின் மேல்
முளைத்து கிடந்தது
பல கதைகளும்
சில கவிதைகளும்.
ஒரு சந்தேகம் ஒழுகிய பொழுதில்
அதன் கிளைகளில்
ஊஞ்சல்கட்டி ஆடத் தொடங்கிய
என் வினாக்களின் பாரம்
தாங்காது முறிந்து விழுந்த
அந்தக் கிளையிலிருந்து உதிர்ந்தது
நீங்கள் யாரும் பார்த்திராததொரு
புத்தம் புதிய யாளி!

- சி.கலைவாணி

சிலுசிலுவென்று
காற்று அடிப்பதாய்
உலாவிக்கொண்டிருந்தன
பேச்சுகள்,
என் கவனமெல்லாம்
அந்தப் பழுத்த இலையின்மேல்.

- யாழி






மரப்பொந்துகள் தேடி
அலைய நேர்ந்த
கிளிகள்
ஒருவேளை நினைக்கலாம்
கூண்டுகளே
தேவலையென

- ஆனந்த்

சதுக்கி...

# கவிதை கஃபே

வரும் வழியில்
மழையில்
மாட்டிக் கொண்டேன்
குடை எப்படியோ?
தப்பித்துக் கொண்டது.

- வீ.சிவசங்கர்



அழுத்தத்தின் அடர்த்தி
கூடிக் கொண்டிருந்த
தனிமை தளும்பும் அந்த
ஆழ்கடல் நடுவில்
நங்கூரமிட்டு நிற்க மனமின்றி
தரை தட்டி கவிழுமென்ற
அபாயம் அறிந்தும்
உன் அலைகளை நோக்கியே
வருகிறது என் கப்பல்!

- அ.ராஜீவ்காந்தி

**வாசகர்களே!**

இது உங்க கவிதைக் காலனி! உங்க சின்னக் கவிதைகளைச் சீக்கிரமா 'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.

# குரல்களால் படிக்கலாம்!




"**க**ல்கியின் சிவகாமியின் சபதத்தை வரி வரியாகப் படித்து ரசித்தவர்களின் காதுக்கு இனிய செய்தியாக சிவகாமியின் சபதம் ஒலி வடிவில் வெளியிட்டிருப்பது மகிழ்ச்சிதான். ஆனால், இந்தச் சவாலான பணியைச் செய்யும் துணிச்சல் எப்படி வந்தது?'' என்று பாம்பே கண்ணனிடம் கேட்டபோது,

''நீங்கள் சொல்வது ரொம்ப சரி! கல்கியின் எழுத்துக்களை சின்னத்திரையிலும், சினிமாவிலும் கொண்டுவர எத்தனையோ ஜாம்பவான்கள் முயற்சி செய்துவிட்டு கைவிட்டிருக்கிறார்கள். (அலை ஓசை மட்டும் டி.வி. சீரியலாக ஒளிபரப்பானது) நான் கூட சிவகாமியின் சபதத்தை, தொலைக்காட்சித் தொடராக எடுக்கத் திட்டமிட்டேன். மகாபலிபுரத்தில் படம்பிடிக்க தொல்பொருள் ஆய்வுத் துறையினரிடமும் அனுமதி வாங்கியும் அதைச் செய்ய முடியவில்லை. குறைந்தபட்சம் சிவகாமியின் சபதத்தை ஒரு ஒலிப் புத்தகமாகவாவது கொண்டு வர வேண்டும் என்று கடந்த ஆண்டு களமிறங்கினேன்.



நரசிம்ம பல்லவர், மகேந்திர பல்லவர், பரஞ்சோதி, சிவகாமி, நாகநந்தி, புலிகேசி, ஆயன சிற்பி அனைவரையும் மீண்டும் வாசகர்களுடன் வாழத் தயார்ப்படுத்தினேன். தமிழ் படிக்கும் பழக்கம் குறைந்த இளம்தலைமுறையினர், காதாறக் கேட்டு அனுபவிக்கவே முப்பதுக்கும் மேற்பட்டோர் ஒவ்வொரு கதாபாத்திரத்துக்கும் குரலில் உயிரூட்டி இருக்கிறார்கள். கல்கி மற்றும் நாவுக்கரசரின் மூன்று பாடல்களும் இதில் நடனக் காட்சிகளாக இடம்பெற்றுள்ளன. மிகவும் சிரத்தையுடன் போர்க்காட்சிகள், கோட்டை முற்றுகை, வெள்ளக் காட்சிகளை சிறப்பு ஒலிகள் மூலமாக தத்ரூபமாகக் கொண்டு வந்திருக்கிறோம்.''

**சு**மார் முப்பது மணி நேரம் ஓடும்படியாக நான்கு குறுந்தட்டுகளாக ஸ்வாதி சொல்யூஷன்ஸ் நிறுவனம் வெளியிட்டுள்ளது. ''அறுபது வருடங்களுக்கு முன்னால் கல்கி எழுதிய நாவலின் ஒரு வார்த்தையைக் கூடக் குறைக்காமல் அப்படியே ஒலிப் புத்தகமாக்கி இருக்கிறோம்'' என்கிறார் பாம்பே கண்ணன்.

- மௌலி

# செவ்வடையான மசால்வடையே!

**பா**ரெங்கும் ஆயிரக்கணக்கான வடைகள் இருந்தாலும், ஏன் இந்தியாவிலேயே பலாப்பழ வடையிலிருந்து, பம்பளிமாஸ் வடை வரை இருந்தாலும், தென்னகத்தில் புழங்கும், குறிப்பாகச் சென்னையில் மணக்கும் மசால் வடையே செவ்வடை அந்தஸ்துக்கு உரியது என்று இந்திய அரசு அறிவித்திருக்கிறது.

இதன் பின்னணி அரசியல் என்ன? ஆலு வடை, தயிர் வடை, கீரை வடை, காலிஃப்ளவர் வடை, வெங்காய வடை போன்ற இந்திய வடைகளுக்குள்ளும் இந்த செவ்வடை ஸ்டேடசுக்குக் கடும் போட்டி. மற்ற எல்லா வடைகளையும் ஊசிப்போனவை, உப்பு போதவில்லை, 'கப்'படிக்கிறது, காரம் போதவில்லை என்றெல்லாம் சொல்லித் துப்பி மசால் வடை மட்டுமே செவ்வடை என்று வாய் கொள்ளாமல் எல்லோரையும் சொல்ல வைத்தது எப்படி?

ஐக்கிய நாடுகள் சபை இது குறித்து வெளியிட்ட குறிப்பொன்றில், 'எவ்வடை செவ்வடை?' என்பதையெல்லாம் இனிமேல் தீர்மானிக்க ஊசவடோ என்கிற ஜப்பானியர் ஒருவடை - மன்னிக்கவும், ஒருவரை - நியமித்திருக்கிறது என்பது தெரியவந்தது.

என்னடா இது மசால்வடைக்கு வந்த சோதனை, ஜப்பானுக்கும் மசால் வடைக்கும் என்னய்யா சம்பந்தம் என்றெல்லாம் கேட்டால், நாம் வடைத்துரோகி ஆகிவிடுவோம் என்று பயமாகவும் இருக்கிறது. இருந்தாலும் அவரையே ஒரு முறை துணிந்து இதுபற்றிக் கேட்டுவிடுவோம் என்று அவரைத் தொலைபேசினேன்.

''செவ்வடையாக மசால்வடையை மட்டும் எப்படி அங்கீகரித்தீர்கள்?''

ஊசவடோ ஒரு முறை ஜப்பானிய மொழியில் கனைத்துக் கொண்டார்.

''திருமுருகாற்றுவடையில் ஆறுவடைகளைப் பற்றிச் சொல்லி இருப்பதாகச் சொல்வதே முதலில் தவறு. 'ஆறு' என்றால் வழி; 'ஆற்றுப்படுத்துதல்' என்றால் 'வழிகாட்டுதல்'. 'ஆற்றுவடை' என்பது தமிழ்க் கவிதை வகைகளில் ஒன்று. ஒரு வள்ளலிடம் பரிசுகள் பல பெற்றுத் தன் வறுமை அழிந்த ஒருவன், வறுமையில் வாடும் இன்னொருவனை அந்த வள்ளல் இருக்கும் இடம், போகும் வழி, வள்ளலின் ஊர், பெயர், அவன் குணங்கள் யாவற்றையும் சொல்லி, 'அங்கே போய் உன் வறுமையை நீக்கிக் கொள், பெரிய விருந்து இல்லாவிட்டாலும், வடையாவது கிடைக்கும்' என்று ஆற்றுப்படுத்துவது இப்பாடல் வகையின் இலக்கணம். திருமுருகாற்றுவடை என்ற நூலில் முருகன் இருக்கும் ஆறு தலங்களின் பெருமைகளைக் கூறி ஆத்ம வடைக்கும் வழிகாட்டுகிறார் நூலாசிரியர் நக்கீரர்.''

இப்படிப் போட்டு சாத்து சாத்தென்று சுத்தத் தமிழில் சாத்தினால் நான் என்ன செய்வேன்? 'சயோனாரா' கூடச் சொல்லாமல் லைனை உடனே கட் செய்துவிட்டேன்.

**இ**ன்னும் விரிவான விளக்கம்

வேண்டி கள்ளிக்காட்டுப் புலவர் ஒருவரை செல்போனில் பிடித்தேன்.

'எனக்கு டை பிடிக்கும், அடை பிடிக்கும், சொல்லடை பிடிக்கும், துடியிடை பிடிக்கும், நன்னடை பிடிக்கும், ஏன் எனக்கு செவ்வடையான மசால்வடையும் மிகப் பிடிக்கும்.'

ஆஹா, யாப்பு, காப்பு, ஆப்பு என்று செமத்தியாக ஏதோ மாட்டிக்கொண்டேன் என்பது மட்டும் எனக்குப் புரிந்தது.

'என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாக மசால்வடை செய்யுமாறே' என்று திருமூலரே திருமந்திரத்தில் என் புகழைப் பற்றிச் சொல்லி விட்டார்' என்று சொந்த சரக்கைப் பற்றி ஆரம்பித்தார் கள்ளிக்காட்டார்.

திருமந்திரத்துக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம், அவர் அப்படியா சொன்னார் என்று நான் திருதிருவென்று விழிக்கையில் அவர் தொடர்ந்தார்:

''மசால்வடையை மட்டம் தட்டிப் பேசுவது ஆரிய, பார்ப்பன சூழ்ச்சி. அது பலிக்காமல் போனதால் இப்போது மசால் வடையும் கைபர் கணவாய் வழியாக இங்கே வந்ததுதான் என்று திராவிட எதிரிகள் சொல்லி வருவது கண்டனத்துக்குரியது.''

''சார், சார்! போதும், போதும். நீங்க எங்கேயோ கோவில் கட்டற ரேஞ்சுக்குப் போயிட்டீங்க. அப்படியே நிப்பாட்டிக்

## ஜாலி ஸ்டோரீஸ்



**லாஸ் ஏஞ்சலீஸ் ராம்**



**"மசால்வடையை மட்டம் தட்டிப் பேசுவது ஆரிய, பார்ப்பன சூழ்ச்சி. மசால்வடையும் கைபர் கணவாய் வழியாக வந்ததுதான் என்று திராவிட எதிரிகள் சொல்லிவருவது கண்டனத்துக்குரியது."**

கறது தான் உங்களுக்கும் எனக்கும் நல்லது"

வெளிநாட்டுக் கிழாரும் சொல்லி விட்டார், உள்நாட்டுத் தமிழர் புலவரும் சொல்லிவிட்டார், இன்னும் ஒரே ஒரு அரசியல்வியாதியையாவது கேட்டு விடலாம் என்று தெருமாவைப் பிடித்தேன் போனில்.

"நாம் அன்றாடம் கலந்தடிக்கும் சாம்பார் வடைக்கும் தயிர் வடைக்கும் கூட செவ்வடை அந்தஸ்து கிடையாதா, தெருமா? இது அடுக்குமா?"

தெருமா பதில் என்ன?

இவ்வளவு பேரைக் கேட்டுவிட்டு வெளிநாட்டுக்காரர்கள் யாரையும் கருத்து கேட்காமல் விட்டால் எப்படி?

"வெளிநாட்டுப் படப்பிடிப்பிலே நான் இருந்தாலும் உள்நாட்டு செவ்வடை விடயங்கள் எனக்குத் தெரியாமல் போகலாமென்று மனப்பால் குடித்தவர்கள் சற்றே மனங்குமுறிக் கமற நேரிடலாம். ஏனென்றால் கறுப்புச் சட்டை போட்டாலும் நானும் செவ்வடைக்காரனே என்பதை வெளிப்படையாகச் சொல்லிக் கொள்வதில் எனக்கு எந்த லாபமும் இல்லையென்றாலும் அதைச் சொல்லாமல் விட்டு விட்டால் பொருட்குற்றம் வந்து விடுமோ என்று நான் பயப்படுவதாக யார் வேண்டுமானாலும் ஒரு நிலைப்பாடு எடுத்துக் கொள்ளட்டும். இது பற்றித் தென்னாப்பிரிக்காவிலே படமெடுக்க நான் ஒரு ஸ்கிரிப்ட் தயார் செய்து வைத்துக் கொண்டு கிரேக்க நாட்டு ஃபைனான்ஸுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன்..."

இத்தனை பிரபலங்களைப் பேட்டி கண்டபின், சுசுவாமியைப் பேட்டி காணாவிட்டால் எப்படி இதெல்லாம் பூரணமாகும் என்று நான் யோசித்துக்கொண்டே இருக்கும்போது என் செல்பேசி ஒலித்தது.

"இந்த மசால் வடை - செவ்வடை பேட்டர்ல நீங்க யார் யாரைப் பேட்டி கண்டேள், அவா என்னென்ன சொன்னான்கறதெல்லாம் நேக்கு எஃப்ஜெ ரிப்போர்ட்ல கொடுத்துட்டா. இன்ஸ்பெக்ட் நான் இப்ப சான்ஃப்ரான்சிஸ்கோவில தான் இருக்கேன். நீங்க என்னைக் கேட்கலைன்னாலும் நான் சொல்றேன் எழுதிக்குங்கோ.

இந்த செவ்வடை மேட்டர்லாம் சுத்த ஹம்பக். சோனியாவும் கருணாநிதியும் சேர்ந்து பண்ற அட்டகாசம். ஒபாமாவே என்னை போன்ல கூப்பிட்டுச் சொல்லிட்டார். நான் வோர்ல்ட் கோர்ட்ல இது பத்திக் கம்ப்ளெய்ன் பண்ணி இருக்கேன்.

செவ்வடையாவது, வெங்காய அடையாவது? எல்லாமே கத்தப் பேத்தல். ஓட்டையே இல்லாத மசால் வடையிலே எப்படிப்பா தாலியை கோப்பாளாம்?" என்றார்.

எனக்கு வயிற்றைக் கலக்குவது போல் இருந்தது. நானே லைனை கட் பண்ணி விட்டேன்.

இவ்வடை தோற்கின் எவ்வடை ஜெயிக்கும்?!

அருள்வாக்கு

# பரோபகாரம்



உடம்பையும் புத்தியையும் சுத்தமாக வைத்துக் கொள்வதே பெரிய பரோபகாரம்தான். துர்ப் பழக்கங்களால் ஒருத்தன் வியாதியை ஸம்பாதித்துக் கொள்கிறான் என்றால், அப்புறம் அவனால் எப்படிப் பரோபகாரம் பண்ண முடியும்? இது மட்டுமில்லை. இவனுடைய வியாதி பிறத்தியாருக்குப் பரவக்கூடும். அதனால், நம் அஜாக்ரதையால், துர்ப்பழக்கத்தால் வியாதியை வரவழைத்துக் கொள்கிறபோது பர அபகாரமும் பண்ணிவிடுகிறோம். நம்மை மீறி வந்தால் அது வேறே விஷயம்.

இந்தக் காலத்தில் எல்லோரும் நோயும் நொடியுமாக அவஸ்தைப்படுகிற மாதிரி நாற்பது, ஐம்பது வருஷங்களுக்கு முந்தியெல்லாம் இல்லை. காரணம் என்னவென்றால், இப்போது அநேகருக்கு மனஸில் நெறியில்லாமல் இருப்பதும், அநேக துராசாரங்கள் வந்திருப்பதும்தான்.

சரீர வியாதிதான் தொத்துகிறது என்றில்லை. எண்ணங்களும் பிறத்தியாரைப் பாதிக்கவே செய்கின்றன. இப்போது ஸயன்ஸில்கூடச் சொல்கிறார்கள், 'மூளை எண்ணங்களாக வேலை செய்வதுகூட ஒரு எலெக்ட்ரிக் கரென்ட்தான்; சிந்தனா சக்திக்குப் பிறரையும் பாதிக்கிற தன்மை இருக்கிறது' என்று. அதனால் நாம் சரீரத்தையும், புத்தியையும் சுத்தமாக வைத்துக் கொண்டிருப்பதாலும் பிறரின் தேக மன ஆரோக்யங்களுக்கு உபகாரம் பண்ணியவர்களாக (அபகாரம் பண்ணாதவர்களாகவாவது) ஆகிறோம்.

பரோபகாரம் சித்தசுத்திக்கு உதவ வேண்டுமானால், அதற்கு உயிர்நிலை அஹங்காரம் என்பது லவலேசங்கூட இல்லாமல் தொண்டு செய்வதுதான். 'நாம் பெரியவர்; உபகாரம் பண்ணுகிறோம்' என்ற நினைப்பை தலையெடுக்கவே விடக் கூடாது. கொஞ்சம் அப்படி நினைத்தாலும் அது உபகாரம் பண்ணுவதன் பலனை - சித்த சுத்தியை - சாப்பிட்டு ஏப்பம் விட்டுவிடும். இரண்டாவது, (அதிலேயே இதுவும் அடக்கம்தான்) ப்ரதி ப்ரயோஜனத்தைத் துளிகூட எதிர்பார்க்கக் கூடாது. உடம்பிலே எந்த அவயவத்துக்குத் துன்பம் வந்தாலும் கண் அழுகிறது அல்லவா? அதைப்போல், உலகத்தில் எங்கே, யாருக்கும் துன்பம் உண்டானாலும் நாம் மனம் கசிந்து, ஒவ்வொருவரும் நம்மாலான உதவியைச் செய்ய வேண்டியது நம் கடமை.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

மனோகருக்கு வந்த வேலை முடிந்து விட்டது. வரும்போதே சாயந்திரம் ரயிலுக்கு ஊரிலேயே அட்வான்ஸாகப் புக்கிங் செய்திருந்தான். ஆச்சரியப்படும் படியாகப் பெர்த்தே கிடைத்திருந்தது. அக்கா நேற்று அவனிடம் பேசியதுதான் அவனை ரொம்பவும் பாதித்தது. ராத்திரியெல்லாம் வெகு நேரம் வரை தூக்கம்




# உள்ளும்

வராமல் படுக்கையிலேயே புரண்டு கொண்டிருந்தான்.

கிருஷ்ணபாரதி ஆபீஸிலிருந்து கொண்டு வந்திருந்த ஃபைலைப் பார்த்துக் கொண்டிருந்தான். வருண் ஹாலில் உட்கார்ந்து கார்த்திகாவுடன் ஒரு கையால் கேரம் விளையாடிக் கொண்டிருந்தான். அவர்கள் விளையாடுவதைப் பாப்பம்மாள் பக்கத்தில் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள். சண்முகம் சோபாவில் உட்கார்ந்து தேவாரம் படித்துக் கொண்டிருந்தார். மனோகர் என்ன செய்வதென்று தெரியாமல் அன்றைய தினசரியைப் புரட்டிக் கொண்டிருந்தான். நேற்று மனோகரி சொன்னதைப் பற்றி கிருஷ்ணபாரதியிடம் பேசலாம் என்றுதான் அவனுக்குத் தோன்றியது. ஆனால், மனோகரிதான் அதைப் பற்றிக் கணவனிடம் பேசக் கூடாது என்று சொல்லி விட்டாளே.

அன்று ஞாயிற்றுக்கிழமை. எல்லோருக்கும் விடுமுறை. சாயந்திரம் ஊருக்குக் கிளம்பும்வரை எப்படிப் பொழுதைப் போக்குவதென்று தெரியவில்லை. மனோகரி சமையலறையே கதி என்று கிடந்தாள்.

# புறமும்

**வண்ணநிலவன்**



காலைப் பலகாரம் எல்லாம் முடிந்து விட்டது. இன்று விடுமுறைதானே? மெதுவாகவே சமைக்கலாம். ஆனால், அவள் விடாப்பிடியாக அடுத்த வேளைச் சமையலைக் கவனிப்பதில் மும்முரமாக இருந்தாள். பொழுதுபோகாமல் மனோகர் வாசலில் வந்து நின்று தெருவை வேடிக்கை பார்க்க ஆரம்பித்தான்.

அவனைத் தேடிக் கொண்டு மனோகரி வந்தாள். "இங்கேயா நிற்கிறே...? சட்டை எல்லாம் போட்டு ரெடியாக இரு. நாம ரெண்டு பேரும் ஒரு எடத்துக்குப் போக வேண்டியிருக்கு..." என்றாள் மனோகரி. அவள் முகத்தில் வியர்வை. முந்தானையினால் வியர்வையைத் துடைத்துக் கொண்டாள்.

"எங்கே அக்கா...?"

"தாம்பரம் வரைக்கும் போக வேண்டியது இருக்கு. நீயும் கூட வந்தா ஒத்தாசையாக இருக்கும்" என்று சொல்லிவிட்டு வீட்டிற்குள் போய் விட்டாள். தனது ஹேண்ட்பேக்கிலிருந்து மொபைலை எடுத்து புவனேஸ்வரியிடம் பேசினாள்.

"புவனேஸ்வரி, இன்னைக்கு ஞாயிற்றுக் கிழமை. குறி கேக்கப் போகணும்... ஞாபகம் இருக்கா" என்று கேட்டாள்.

"நானே உனக்கு போன் பண்ணணும்னு நெனைச்சேன். நீயே பண்ணிட்டே. எப்போ வர்றே? இடம் தெரியுமா?" என்று புவனேஸ்வரி கேட்டாள்.

"அதுதான் நேத்து அடையாளம் எல்

## இது தமிழ்த் திணிப்பா?

செம்மொழி மாநாடு முடிந்த கையோடு ஜூலை 5 முதல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் அனைவரும் தமிழில் கையெழுத்துப் போடவும், தமிழில் அலுவல் குறிப்பு எழுதவும் வேண்டுமென அரசு உத்தரவாம். தமிழ்த் தெரியாத பிறமொழித் துறை பேராசிரியர்கள் இது தமிழ்த் திணிப்பு என்று புலம்புகிறார்களாம்!

- ஞானம்





லாம் சொன்னியே... தாம்பரத்திலே இறங்கி ஆட்டோ பிடிச்சு வந்திடறோம். தம்பியும் என்னோட வர்றான். நீ எப்படி அங்கே வர்றே? நாங்க வேணுமானா தாம்பரத்திலே நிக்கட்டுமா...?'' என்று கேட்டான்.

''நான் சிட்லபாக்கத்திலே இருந்து ஷார்ட்கட்டா வந்திருவேன். நீ எத்தனை மணிக்கு வர்றே?''

''இன்னொரு பத்து நிமிஷத்திலே கௌம்பிடுவோம். பதினொன்னரைக்கெல்லாம் அங்கே இருப்போம்.''

''சரி... வா...'' என்று போனை வைத்து விட்டாள் புவனேஸ்வரி. சமையலறையை ஒழுங்குபடுத்தி விட்டுக் குளித்தாள் மனோகரி. எதுவும் புரியாமல் மனோகர் உடை மாற்றிக் கொண்டு ஹாலில் வந்து உட்கார்ந்தான்.

''எங்கேயாவது வெளியே கௌம்புறீயா?'' என்று கிருஷ்ணபாரதி கேட்டான்.

''அக்காதான் வெளியிலே போகணும். ரெடியா இருன்னு சொன்னா...''

''எங்கே போறா...?'' என்று கிருஷ்ணபாரதி தனக்குத்தானே பேசிக் கொண்டான். ஹால் ஜன்னல் சன்ஷேடில் ஒரு காகம் உட்கார்ந்து கொண்டு கரைந்தது. வருணும், கார்த்திகாவும் சத்தம் போட்டு உற்சாகமாகக் கேரம் விளையாடிக் கொண்டிருந்தனர். கிருஷ்ணபாரதி மீண்டும் தன் அலுவலக வேலையில் மூழ்கினான். நிறைய மேனுஸ்கிரிப்ட்கள் அவன் முன்னே அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் படித்து, தேவையானவற்றை 'செலக்டட்' என்று எழுதிப் பைசல் செய்வதில் மும்முரமாக இருந்தான். அதற்குள் மனோகரி புடைவை மாற்றிக் கொண்டு வந்து விட்டாள். வருணிடமும், கார்த்திகாவிடமும் சென்று சமர்த்தாக விளையாடி விட்டுச் சாப்பிட வேண்டும், தாம்பரம் வரை போய்விட்டு வந்து விடுவதாகச் சொன்னாள். பாப்பம்மாளிடமும் சொல்லிக் கொண்டாள்.

''மனோ, எங்கே போறே?'' என்று கிருஷ்ணபாரதி கேட்டான்.

''ஏதோ வேலையாப் போறேன். என்ன எதுக்குன்னு எழுதி ஒட்டணுமா?'' என்று எரிச்சல்பட்டாள் மனோகரி. அதற்கு மேல் கிருஷ்ணபாரதி எதுவும் பேசவில்லை. ''வாடா'' என்று தம்பியை அழைத்துக் கொண்டு வெளியே போனாள் மனோகரி.

ரயிலில் போகும்போதுதான் மனோகர் எங்கே போகிறோம் என்பதை அவனிடம் சொன்னாள். அவனுக்கு ஜோதிடம், குறி

கேட்பது இதிலெல்லாம் இஷ்டமில்லை. குறி கேட்பதற்காகத் தன்னையும் அக்கா அழைத்துச் செல்வது எரிச்சலாகக் கூட இருந்தது. ஆனால், மனோகரி இருந்த மனநிலையில், அவளுக்கு ஏதாவது ஒரு விதத்தில் ஆறுதல் ஏற்பட்டால் போதும் என்று நினைத்தான் மனோகர். அதற்காகத் தான் அவளுடன் செல்ல நேர்ந்ததை அவன் பொருட்படுத்தவில்லை.

தாம்பரத்தில் இறங்கிச் சிறு சிறு கிராமங்களைத் தாண்டிச் செல்ல வேண்டிய திருந்தது. போய்ச் சேரும்போது மணி பன்னிரெண்டாகி விட்டது. அவர்கள் சென்ற சிறிது நேரத்தில், புவனேஸ்வரியும் தன் மகனுடன் வந்து சேர்ந்தாள். அது ஒரு அம்மன் கோயில். அதன் அருகே இருந்த ஒரு வீட்டில் அந்தப் பெண் குறிசொல்லிக் கொண்டிருந்தாள். குறி கேட்க வருகிறவர்கள் உட்காருவதற்காகப் பந்தல் போடப்பட்டிருந்தது. மூன்று, நான்கு கார்கள் கூட அங்கே நின்று கொண்டிருந்தன. இருபது இருபத்தைந்து பேர் பந்தலில் குறி கேட்பதற்காகக் கூடியிருந்தார்கள். மனோகரியும் அவனும் ஆட்களோடு ஆட்களாகப் போய் உட்கார்ந்தார்கள். குறி சொல்லுகிற அறைக்குள்ளிருந்து அவ்வப்போது உடம்பெங்கும் சந்தனம் பூசிய ஒருவர் வெளியே வந்து, பெயர் சொல்லி அழைத்தார். அவளுடைய பெயரைக் கூப்பிட்டு விட்டார்களோ என்று பக்கத்திலிருந்த பெண்ணிடம் மனோகரி கேட்டாள். கூப்பிடவில்லை என்று அந்தப் பெண் சொன்னதும் மனோகரிக்கு ஆசுவாசமாக இருந்தது.

''பதினொன்னரை மணிக்கு மேலாகத்தான் அம்மாவுக்கு அருள் வந்துச்சு'' என்றாள் அந்தப் பெண். அவளுடைய மகளைப் போல இருந்த பக்கத்திலிருந்த

''என்ன பாட்டி, கதையைப் பாதியிலே நிறுத்திட்டு 'ஹார்லிக்ஸ்' குடிக்கறே?''

''இது விளம்பர இடைவேளைடா செல்லம்!''

-லெ.நா.சிவகுமார்

---

''என் மாமியார் ஆனாலும் ரொம்பப் பொல்லாதவங்க.''

''நிஜமாவா?''

''ஆமாம்! டி.வி. சீரியல்ல வர்ற மருமகளைக்கூடத் திட்டுவாங்கனா பாரேன்...''

-வி. சாரதிடேச்சு

---

''ஒரே தப்பை நீங்க ரெண்டு பேரும் செஞ்சிருந்தாலும், உன் அம்மா உன்னை விட்டுட்டு, உன் அக்காவை மட்டும் ஏன் அடிக்கறாங்க?''

''அவ எங்க பாட்டி சாயலல்ல இருக்கிறாளாம்!''

- வெ.சீதாராமன்



பெண், ''சமயத்திலே அருள் ரொம்ப நேரம் நிக்கும். சில சமயம் சீக்கிரமாவே இறங்கிரும்... சொல்ல முடியாது. நம்ம அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது'' என்றாள்.

மனோகர் வேடிக்கை பார்க்கிற மனநிலைக்கு வந்திருந்தான். கிராமமாக இருந்ததால், காற்று நன்றாக வீசிக் கொண்டிருந்தது. புவனேஸ்வரியும், மனோகரியும் பக்கத்திலிருந்த அம்மன் கோயிலுக்குச் சென்றார்கள்.



தொடர்ந்து படப்பிடிப்புக்கு காலதாமதமாய் வந்து கடுப்பேற்றிக் கொண்டிருந்த 'சீதை' ஐஸ்வர்யா... ராவணன் அடிபட்டு வீழ்ந்ததால் இப்போதெல்லாம் ஒழுங்காக, மீதி வேலைகளைச் சரியாகச் செய்ய ஒத்துழைப்பு தருகிறாராம். இதனால் எந்திரனுக்கு ஏககுஷியாம்.

- சூர்யா

## எந்திரன் குஷி!

நடை சாற்றியிருந்ததால், வெளியில் நின்றபடியே கும்பிட்டுவிட்டுத் திரும்பி வந்து உட்கார்ந்தார்கள். குறி கேட்க வந்திருந்தவர்களில் ஆண்களை விடப் பெண்களே அதிகமிருந்தார்கள். பொதுவாகவே பெண்களுக்குத்தான் சடங்கு, சம்பிரதாயம், பக்தி, ஜோதிடம் இவைகளிலெல்லாம் ஈடுபாடு அதிகம் என்று நினைத்தான் மனோகர். அம்மா கூட இப்படித்தான் இருக்கிறாள். தினசரி நெல்லையப்பர் கோயிலுக்குப் போகாமல் அவளுக்குத் தீராது. அப்பாவுக்குக் கடவுள் பக்தி எல்லாம் உண்டு. ஆனால், அதற்காக அடிக்கடி கோயிலுக்குப் போக மாட்டார். அவனும் அப்பாவின் வார்ப்புதான். அம்மா அளவுக்கு இல்லாவிட்டாலும் ரஞ்சனிக்கும் கோயிலுக்குப் போகிற பழக்கமெல்லாம் உண்டு. அவனுக்குக் கல்யாணமெல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டுமே என்பதற்காகத்தான், அப்பா அவனுடைய ஜாதகத்தை எல்லாம் எடுத்துக் கொண்டு ஜோதிடர்களைத் தேடிப் போகிறார்.

மனோகரி கண்களை மூடி ஏதோ ஸ்லோகத்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். புவனேஸ்வரி அவனிடம் ஊரிலுள்ள குடும்பத்தாரைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தாள். பலர் குறி கேட்டு விட்டுச் சென்று விட்டார்கள். அவர்களுக்குப் பிறகு வந்தவர்களே இருந்தனர். ''மனோகரி அம்மா, மனோகரி அம்மா'' என்று கூப்பிட்டார் சந்தனக்காரர். நால்வரும் உள்ளே சென்றனர். மங்கிய வெளிச்சத்தில் ஒரு பெண் மாலையணிந்து உட்கார்ந்திருப்பது தெரிந்தது. பூஜையறை போன்று இருந்த சிறு மாடத்தில் மாலையிடப்பட்ட படங்கள் இருந்தன. ஊதுபத்தி வாசனை அந்த அறையெங்கும் வீசியது. மனோகரியும், புவனேஸ்வரியும் முன்னால் உட்கார்ந்தனர். மனோகரும், புவனேஸ்வரியின் மகனும் அவர்களின் பின்னால் உட்கார்ந்தனர்.

''யார் மனோகரி...?'' என்று கரகரத்த குரலில் அந்த அம்மாள் கேட்டாள்.

''நாந்தாம்மா...'' என்றாள் மனோகரி. சிறிது நேரம் அமைதி நிலவியது. அந்த அம்மாள் கண்களை மூடிக் கொண்டே ''கேளு'' என்றாள்.

''என் குடும்பம் நல்லா இருக்குமாம்மா?'' என்று கேட்டாள் மனோகரி.

கேட்கும்போதே குரல் தழுதழுத்தது. கண்களில் கண்ணீர் திரையிட்டது.

"இப்போ கொஞ்சம் கஷ்டம்தான். உனக்குக் கெரகம் சரியில்லே. ஆடி கழியணும். தினசரி துர்க்கைக்கு வெளக்குப் போடு..." என்று ஆடிக் கொண்டே சொன்னாள். இப்பொழுது அவள் கஷ்டத்துடனிருக்கிறாள் என்பதில் என்ன ஆச்சர்யம்? அதனால்தானே குறிகேட்க வந்திருக்கிறாள் என்று மனோகர் நினைத்தான்.

"என் பையனுக்கு அடிபட்டிருக்கும்மா. அவனுக்குப் படிப்பு சரியா ஏறலை. நல்லா படிப்பானா? அம்மா தான் சொல்லணும்" என்றாள். அத்தானும், அக்காவும் வருணைச் சரியாகக் கவனித்தால் வருண் நன்றாகப் படிப்பான். வீக்கான பாடத்தில் டியூஷன் வைத்தாலே போதும் என்று மனோகருக்குத் தோன்றியது.



## "எம் புருஷன் எனக்குக் கிடைப்பாரா?"

"ம்...ம்... ஒம் பிள்ளைகளுக்குப் படிப்புக்குக் கொறைவு இல்லே. பையனுக்குத் தெசை நடக்கணும். அதுதான் அடிபட்டிருக்கு. முடிஞ்சா அவனை இங்கே ஆத்தா சன்னதிக்கு ஒரு தடவை கூட்டிட்டு வா. நான் மந்திரிச்சுத் தாரேன்..." என்றாள். புவனேஸ்வரி, 'உன் ஹஸ்பண்டைப் பத்திக் கேளு' என்று மனோகரியின் காதருகே குனிந்து கிசுகிசுத்தாள்.

"எம் புருஷன் எனக்குக் கெடைப்பாரா...?" என்று கேட்டாள் மனோகரி.

"அவன் உன் கூட இல்லையா..?" என்று அந்த அம்மாள் கேட்டாள்.

"கூடத்தான் இருக்காங்க. ஆனால், இடையிலே ஒரு பெண் குறுக்கிடறா?"

"அதான் சொன்னேனே ஆடி கழியணும்னு... உனக்கு இப்போ கொஞ்சம் நேரம் சரியில்லை. நான் சொன்னதைச் செய்..." என்று தன் முன்னே இருந்த விபூதிக் கொப்பரையிலிருந்து விபூதியை எடுத்துக் கொடுத்தாள். மனோகரி அந்த அம்மாளின் முன்னால் மண்டியிட்டு நமஸ்கரித்து விபூதியை வாங்கிக் கொண்டாள். புவனேஸ்வரியும் நமஸ்கரித்தாள். ஹேண்ட் பேக்கிலிருந்து 201 ரூபாயை எடுத்து சந்தனக்காரரிடம் கொடுத்தாள் மனோகரி. மனோகரியும் புவனேஸ்வரியும் வெளியே வருவதற்கு முன்பே மனோகரும், அந்தப் பையனும் வெளியே வந்துவிட்டனர். சந்தனக்காரர் அடுத்த பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார்.

புவனேஸ்வரி அந்தப் பெண்ணைப் பற்றி மனோகரியிடமும், மனோகரிடமும் புகழ்ந்து பேசினாள். அவள் சொன்னது சொன்னபடி நடக்கும் என்றாள். பேசிக் கொண்டே பஸ் ஸ்டாப்பிங்குக்கு வந்தனர். ஷேர் ஆட்டோ ஒன்று வந்து நின்றது. அதில் ஏறி மேடவாக்கம் வந்தனர்.

தாம்பரம் பஸ் உடனே வந்தது. தாம்பரத்தில் ரயிலைப் பிடித்தார்கள். புவனேஸ்வரியும் அவள் மகனும் சானடோரியத்தில் இறங்கிக் கொண்டனர். மனோகரியின் முகம் சற்றுத் தெளிவாக இருப்பது போலிருந்தது அவனுக்கு. இருவரும் வீடு வந்து சேர்ந்தபொழுது மூன்றே கால் ஆகிவிட்டது. மாலை மனோகர் ஊருக்குக் கிளம்ப வேண்டும்.

**(தொடரும்)**

அதன் பிரம்மாண்டமும் பளபளப்பும் நம்மைப் பிரமிக்க வைக்கிறது. அந்தக் கண்ணாடிப் பரப்பில் பிரதிபலிக்கும் நகரும் மேகங்களின் பின்னணியில், சிக்காகோ நகரின் பளிச்சென்ற வானளாவிய கட்டடங்கள் தங்களை அழகு பார்த்துக் கொண்டிருக்கின்றன. நகரின் சென்ட்டர் பார்க்கின் முகப்பில் பசுமையான சோலையின் பின்னணியில், கம்பீரமாக ஒரு ராட்சத பீன்ஸ் விதை வடிவில் நிற்கும் அந்த நவீனச் சிற்பத்தின் பெயர் 'மேகங்களின் கதவு' (cloud gate).

33 அடி நீளமும் 66 அடி உயரமும் கொண்ட இது, முழுக்க முழுக்க 168 ஸ்டியின்லஸ் ஸ்டீல் தகடுகளினால் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், எந்த இடத்திலும் இணைப்புகள் தெரியாமல் வெல்டிங்கும் விசேஷ பாலிஷும் செய்யப்பட்டிருப்பதனால், முகம் பார்க்கும் கண்ணாடியாக மின்னுகிறது. இந்தச் சிற்பத்தை வெளியே சுற்றிப் பார்க்க மட்டுமில்லை, உள்ளே நுழைந்து நடந்து வெளியே வரவும் முடியும். அவ்வளவு பெரிது. உள்ளே நடக்குமிடத்தின் கூரை உட்புறம் குவிந்த குழி ஆடியாக வடிவமைக்கப்பட்டிருப்பதால், நுழைபவர்களின் உருவம் தலைகீழாகப் பல பிம்பங்களாகத் தெரிவதைத் தங்கள் குழந்தைகளுக்குக் காட்ட, வந்த பெரியவர்களும் குழந்தைகளாகி மகிழ்கிறார்கள்.

2004-ஆம் ஆண்டு சிக்காகோ நகரின் 100 ஆண்டு விழாவின் நினைவாக, நவீன சிற்பப்பாணியில் ஒரு புது மாதிரியான நினைவுச் சின்னம் வடிவமைக்க, சர்வதேச அளவில் நடந்த போட்டிக்கு வந்த 30 டிசைன்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்த டிசைனைத் தயாரித்தவர் அனிஷ் கபூர் என்கிற லண்டனில் வாழும் இந்தியர். டிசைனை 'சிற்பமாக' நிர்மாணிக்க இரண்டு ஆண்டுகளானது. 110 டன் எடையுள்ள இதைத் தயாரிக்க ஆன மொத்த செலவு 23 மில்லியன் அமெரிக்க டாலர்கள் (கிட்டத்தட்ட 104 கோடி ரூபாய்கள்). முழுப்பணமும் மக்கள், நிறுவனங்கள்


• அனிஷ் கபூர்



**உள்ளூர் மக்கள் செல்லமாக 'பீன்ஸ்' என்று அழைக்கும் இதை, ஆண்டுதோறும் பார்க்க வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை பத்து லட்சத்தைத் தாண்டுகிறது.**

# தரையில் விழுந்த பாதரஸத் துளி!

நன்கொடையாகத் தந்தது. உள்ளூர் மக்கள் செல்லமாக 'பீன்ஸ்' என்று அழைக்கும் இதை, ஆண்டுதோறும் பார்க்க வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை பத்து லட்சத்துக்கும் மேல்.

"தரையில் விழுந்த ஒரு பாதரஸத் துளியிலிருந்து கிடைத்த இன்ஸ்பிரேஷனில் எழுந்தது இது. மிதக்கும் மேகங்களின் பின்னணியில், உயர்ந்த கட்டடங்களின் இடையில், நடந்து போகும் வினோத உணர்வு மேலோங்கப் பெருமிதத்தோடு நடக்கும் மக்கள் சிக்காகோவின் கம்பீரத்தை உணர உருவாக்கியது" என்று சொல்லும் அனிஷ் கபூர், இங்கிலாந்தில் வசிக்கும் ஒரு இந்திய ஓவியர். நவீனச் சிற்பங்களால் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் புகழ்பெற்றவர். ஷங்கர் ஸ்டைலில் எதையும் பிரம்மாண்டமாகச் செய்யும் இவர், நியூயார்க் நகரில் நிறுவிய "ஸ்கை மிரர்" என்ற மிகப் பெரிய வட்டக் கண்ணாடிச் சிற்பம் ராக்பெல்லர் சென்டரில் பலரைக் கவர்ந்து கொண்டிருக்கிறது.

2012-ல் நடக்கப் போகும் ஒலிம்பிக்கிற்காக லண்டனில் 15 மில்லியன் பவுண்ட் செலவில் நிறுவப்படப் போகும் ஒரு பிரம் மாண்டமான நினைவுச் சின்னத்திற்கு, அனிஷ்கபூரின் டிசைன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது. சின்னம் என்ன வடிவம் என்பது ரகசியமாம். - ரமணன்

# அழகான பேய்!

இந்தப் படத்தில் வருவது ஒரு பேய் இல்லை; இரண்டு பேய்கள்; இரண்டுமே நல்ல பேய்கள். படம் பார்க்கிறவர்களுக்கு, 'அட! நம்ம வீட்டில் இதுபோல ஒரு பேய் இருந்தால் ரொம்ப நல்லா இருக்குமே!' என்று நினைக்க வைக்கும்படியான கதைதான் ஆனந்தபுரத்து வீடு! பேயுடன்தான் படத்தின் கதையே ஆரம்பமாகிறது'' என்று ஆரம்பிக்கிறார் மர்மதேசம், விடாது கறுப்பு போன்ற டி.வி.தொடர்கள் மூலமாக நம்முடைய வீட்டுக்குள் வந்து மிரட்டிய இயக்குநர் நாகா. வண்ணத் திரையில் முதல் முறையாக ஒரு பேய்க்கதைச் சொல்லி மிரட்டப் போகும் நாகாவைச் சந்தித்தபோது....

**வீடும் ஒரு கேரக்டர்தான்**

''பேய்க்கதை என்பதால், அதற்கேற்ற படியாக ஒரு வீடு தேடி அலைந்தோம். கேரள ஸ்டைல் தனி வீடு என்றால் சரியாக இருக்கும் என்று கொச்சி போய்த் தேடினதில், களப்புறாக்கள் வீடு என்று ஒரு பழங்காலத்துப் பங்களா கிடைத்தது. மர்மக் கதைக்கு அத்தியாவசியமான மாடிப்படி, உயரமான மேற்கூரை, இருட்டு எல்லாம் வேண்டிய அளவுக்கு அந்தப் பங்களாவில் இருக்கின்றன. கதையில் அந்த வீட்டுக்கும் ஒரு முக்கியமான பங்கு இருக்கிறது. அந்த வீடு கூட ஒரு முக்கியமான கேரக்டர் என்றே சொல்லலாம். படத்தில் முக்கால் வாசிக்கு மேல் அந்த வீட்டுக்குள்ளேதான் படம்பிடித்திருக்கிறோம்.



* நாகா

**நோ கேமரா! ஒன்லி டைரக்‌ஷன்!**

''நான் பூனா திரைப்படக் கல்லூரியில் ஒளிப்பதிவு படித்திருந்தும், சில இந்திப் படங்களுக்கு ஒளிப்பதிவாளராகப் பணியாற்றியிருந்தாலும் ஆனந்தபுரத்து வீடு படத்துக்கு நான் கேமராமேனாக இல்லை. கேமரா, இயக்கம் இரண்டு வேலையையும் நானே செய்வதில் எனக்கு உடன்பாடில்லை. கேமராவுக்குப் பின்னால் ஒரு ஒளிப்பதிவாளராக நின்று, லென்ஸ் வழியாகக் காட்சியைப் பார்க்கிறபோது, லைட்டிங், கேமராக்கோணம் போன்ற விஷயங்களில்தான் என் கவனம் இருக்குமே தவிர, ஒரு இயக்குனராக நடிகர்களின் நடிப்பின் மீது இருக்காது. எனவே, இந்தப் படத்துக்கு அமெரிக்காவில் ஒளிப்பதிவு படித்த அருண்மணி பழனி என்ற நண்பர்தான் ஒளிப்பதிவு செய்திருக்கிறார்.

**மீண்டும் பேய்க்கதை?**

''ரமணி-ரமணி, வீட்டுக்கு வீடு லூட்டி போன்ற சீரியல்கள் கூட நான் பண்ணியிருக்கிறேன் என்றாலும், ரசிகர்கள் என்னிடமிருந்து எதிர்பார்ப்பது மர்மதேசம் போன்ற பேய்க் கதைகளைத் தான். பேய் இருக்கிறதா? இல்லையா? என்ற விவாதத்துக்குள்ளே செல்லாமல், இருக்கிறது என்ற அடிப்படையில் ஸ்கிரிப்ட் எழுதி இருக்கிறேன்.''

**யார் பேய்?**



''சுமார் நாற்பது குழந்தைகளைப் பார்த்து கடைசியில், மூன்று வயது குட்டிப் பையன் ஆர்யனை விசாகப்பட்டினத்திலிருந்து தேர்ந்தெடுத்தேன்.''

**உங்க மிரட்சிதான் என் வெற்றி**

''டி.வி. மெகா சீரியல் இயக்குநர்களுக்கெல்லாம் இறுதி இலக்கு சினிமா இயக்குநர் ஆவதுதானா? அதுதானே இயற்கை? நான் இயற்கையோடு இயைந்திருக்கேன்'' என்று சொல்லும் நாகா, ஆனந்தபுரத்து வீடு ஆவி மூலம் நம்மை மிரட்டப் போகிறார்...

நாம மிரண்டாத்தான் அவருக்கு வெற்றியாம்...

**மௌலி**

# நடக்குமென்பார்; நடக்கும்!

11.07.2010 முதல் 17.07.2010 வரை

## மேஷம்:

நல்ல தகவல் வரும் வாரம். வழக்கு வியாபாரம் வெற்றி அளிக்கும். பண வசதி பெருகும். நவநாகரிகப் பொருட்கள் வாங்குவீர்கள். உடல்நலம் நன்றாக இருக்கும். எதிரி தொல்லை ஒழியும். நல்லவர் உதவி வந்து சேரும். வியாபாரத்தில் அபரிமிதமான வருமானம் கிட்டும். வழக்கு விவகாரம் வெற்றி அளிக்கும். குடும்ப வாழ்வு மகிழ்ச்சிகரமாக இருக்கும்.

## ரிஷபம்:

சுபநிகழ்ச்சிகள் நடக்கும். வரவேண்டிய நிலுவைகள் வரத் துவங்கும். உடன் பிறப்புகளால் அனுகூலம் ஏற்படும். வேலைப்பளு குறையும். குடும்பத்தில் இணக்கமான போக்கு தென்படும். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். மாற்று இடத்துக்கு மாறிப்போகவேண்டியிருக்கும். புதிய தொழில் நற்பலனை அளிக்கும். வழக்கு வெற்றி பெறும்.

## மிதுனம்:

உத்யோக இடமாற்றம் ஏற்படும். உறவினர்கள் விலகிப் போவார்கள். வீடு மாற்றம் செய்ய வேண்டி இருக்கும். வியாபாரத்தில் நல்ல வருமானம் கிடைக்கும். கடன் சுமை தீரும். வாக்குவன்மை மேலோங்கும். நீண்ட தூரப் பயணம் செல்ல வேண்டியிருக்கும். நினைத்த காரியம் நிறைவேறும். புண்ணியத் தலங்களின் தரிசனம் கிடைக்கும் வாய்ப்புண்டு.

## கடகம்:

வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். மனத்தில் உற்சாகம் நிறைந்திருக்கும். பணப்பிரச்னை இருக்காது. செலவுகள் கட்டுக்குள் இருக்கும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். நண்பர்கள், உறவினர்கள் மூலம் நற்பலன்கள் கிட்டும். வீடு / மனை வாங்கச் சிறந்த தருணம். திருமணம் கைகூடும்.

## சிம்மம்:

மறைமுக எதிரிகளால் தொல்லை உண்டு. உடல்நிலையில் கவனம் தேவை. கடன் சுமை அதிகரிக்கும். கொடுக்கல் - வாங்கல் இழுபறியாகும். தொலைதூர இடமாறுதல் உண்டாகும். பூர்விகச் சொத்து பாகப்பிரிவினையாகும். பணக்கஷ்டம் வராது. வியாபாரத்தில் போட்டி - பொறாமை இருக்கும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலனளிக்கும். கவனமுடன் இருக்கவும்.

## கன்னி:

உடல் நலம் நன்றாக இருக்கும். கடன் சுமையிலிருந்து விடுதலை கிட்டும். நீண்ட கால நிலுவை விஷயம் கைகூடும். வேலைப் பளு குறையும். புதிய வேலைவாய்ப்பு தேடி வரும். தாயின் உடல்நிலை பாதிக்கும். அனாவசியமான செலவுகள் குறையும். புதிய பொருள் வாங்குவீர்கள். வீடு மாற்றம் உண்டு. வாணிபத்தில் நல்ல லாபம் கிடைக்கும்.

## துலாம்:

உடல் நலத்தில் கவனம் தேவை. பொருளாதார முடக்கம் உண்டாகும். தொழில் துறையில் போட்டி, பொறாமை அதிகரிக்கும். உடல் நலத்தில் கவனம் தேவை. திடீர்ப் பயணம் செய்ய வேண்டிவரும். வேலைப்பளு அதிகமாகும். வழக்குகள் சற்றுத் தள்ளிப்போகும். வேலை மாற்றம் உண்டாகும். புதிய நபரின் வருகையால் இடையூறுகள் ஏற்படலாம். புண்ணியத் தலம் செல்வீர்கள்.

**தஞ்சை பரத்வாஜ்**

## விருச்சிகம்:

மனத்தில் நினைத்த காரியம் ஒன்று நிறைவேறும். உடல் நலத்தில் கவனம் தேவை. கூட்டாளிகள் பிரிய நேரிடும். பலரிடத்தில் வாக்குவாதம் வளரும். குடும்ப விஷயத்தில் அனுசரணை தேவை. பணக் கஷ்டம் இருக்காது. புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். கணக்கு வழக்குகளில் கவனமாக இருப்பது நல்லது. வாக்குறுதி வழங்கும் விஷயத்திலும் எச்சரிக்கை தேவை.

## தனுசு:

வீடு / மனை வாங்கச் சிறந்த தருணம். நீண்டகால நிலுவைப் பிரச்னை ஒன்று முடிவுக்கு வரும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலனளிக்கும். உற்றார் உறவினரால் அனுகூலம் ஏற்படும். கடன் சுமை தீரும். வியாபாரத்தில் நல்ல பலன் கிட்டும். வீடு மாற்றம் ஏற்படலாம். உத்யோகத்தில் பதவி உயர்வு கிடைக்கும். வழக்கு வெற்றியாகும்.

## மகரம்:

வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். பணவசதி பெருகும். கடன் சுமை தீரும். சுபகாரியங்கள் கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நண்பர்கள் மூலமாகச் சில நல்ல பலன்கள் விளையும். போட்டி, பொறாமை அதிகரிக்கும். வேலையில் நற்பெயர் கிட்டும். எதிரிகள் தொல்லை இருக்காது. குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும்.

## கும்பம்:

நீண்ட கால நிலுவைகள் வசூலாகும். பூர்விகச் சொத்து விற்பனையாகும். கூட்டாளிகள் இடம் மாறிப் போவார்கள். புதிய தொழில் முயற்சி பயனளிக்கும். கடன் சுமை தீரும். சேமிப்பு பெருகும். சிலருக்குப் புதிய சொத்து வந்து சேரும். தடைகள் விலகி, நற்பலன்கள் அதிகரிக்கும். குடும்ப நலம் நன்றாக இருக்கும். உறவுகள் மேம்படும்.

## மீனம்:

உத்யோக இடமாற்றம் ஏற்படும். வீடு / மனை விஷயத்தில் ஆதாயம் கிட்டும். கடன் தொல்லை தீரும். புதிய தொழில் முயற்சி பலனளிக்கும். நீண்டகால முயற்சி ஒன்றில் அனுகூலம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வேலையில் நற்பெயர் கிட்டும். வியாபாரம் நன்கு செழிக்கும். உடல் நலம் நன்றாக இருக்கும். குடும்பத்தில் குதூகலம் கூடும். கொடுக்கல் - வாங்கல் சிக்கல் தீரும். மொத்தத்தில் நன்மையான வாரம்.




''எனக்கு அடுத்த வாரம் கல்யாணம் அவசியம் வந்துடுங்க.''

''உங்களுக்கு ஒரு ஆபத்துன்னா வராம இருப்பேனா?''

-பி.பாலாஜி கணேஷ்

''டாக்டர் எதுக்கு இத்தனை மாத்திரை எழுதியிருக்கீங்க..?''

''ஏதாவது ஒரு மாத்திரையில உங்க வியாதி குணமாயிடும்னுதான்...''

-கே.பிரசன்னகுமார்





''சாகும்வரை உண்ணாவிரதம்னு சொல்லிட்டு ரெண்டே நாள்ல உண்ணாவிரதத்தை முடிச்சுக்கிட்டாரே தலைவர்?''

''நிருபர்கள் கேட்டதுக்கு, 'சாகும்வரை அடிக்கடி இந்த மாதிரி உண்ணாவிரதம் இருப்பேன்'னுதான் சொன்னாராம்!''

- சீர்காழி வி.ரேவதி

சன் டிவி.யில் தினமும் இரவு 8 மணிக்கு ஒளி பரப்பாகும் திருமதி செல்வம் என்ற சீரியல்தான். வழக்கமான சீரியல்களில் வீட்டிற்கு மூத்த மகள், அல்லது மருமகள் தியாகம் செய்வது மாதிரி குடும்பத்துக்காகக் கஷ்டப்படுவது மாதிரி இருக்கும். இந்த சீரியலுக்கு பேசாமல் திரு.செல்வம் என்றே வைக்கலாம். அந்த அளவுக்கு ஹீரோவின் நடிப்பு நம்மை நெகிழ வைக்கிறது.

கதா திருமூர்த்தி தம்பதியினர்

# என் வீட்டுக்காரரும் அப்படித்தான்!

குடிகாரத் தந்தை, மாற்றாந்தாயான சித்தி, இவரது இரண்டு குழந்தைகள், தம்பி, தங்கை அனைவருக்கும் ஒர்க்-ஷாப் தொழிலாளியாக வேலை செய்து, கடுமையாக உழைத்துக் காப்பாற்றுகிறார். மனைவியின் உணர்வுகளை மதிக்கிறார். மிகவும் அன்புடன் நடத்துகிறார். மாமியார் தன்னை அலட்சியப்படுத்தினாலும், மரியாதை தருகிறார். தம்பியும், தங்கையும் கோபித்ததோடு, தன்னுடன் சண்டை போட்டாலும், அவர்களை அக்கறையாக, ரொம்பப் பொறுமையாகக் கவனித்து வளர்க்கிறார். படிக்க வைக்கிறார். ஒவ்வொரு குடும்பத்திலும் ஆண் பிள்ளைகள் இப்படி- அக்கறையாக, பொறுமையாக இருந்தால் வீட்டில் ஏதுங்க பிரச்னை? அதனாலதான் செல் வம் சீரியலை நானும், என் கணவரும் விரும்பிப் பார்க் கிறோம். என் வீட்டுக்காரரும் அந்த மாதிரி குணமுள்ளவர்தான்.

எனக்குப் பிடித்தது மெட்டி ஒலிதான். மறு ஒளிபரப்புத்தான் என்றாலும், காணும்போது, பல பாடங்களைக் குடும்பங்களுக்குக் கற்றுத் தருகிறது. அக்கா தங்கை ஒற்றுமை. பாசமுள்ள தந்தை. உறவுகளில் விட்டுக் கொடுக்காத தன்மை. மாமியார் தனக்கும் ஒரு மகள் இருப்பதை மறந்து மருமகளைப் படுத்தும் கொடுமை. மருமகள் என்பவள் இப்படித்தான் பொறுமையாக இருக்க வேண்டும் என்ற நிலைமை. மொத்தத்தில் மனித உறவுகளின் கதம்பமான பல உணர்வுகளைக் குடும்பத்தில் உடனிருந்து பார்ப்பது போன்ற அனுபவத்தைத் தருகிறது மெட்டி ஒலி சீரியல்.

— தேவி


தேவி

டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்... 'சேனல் சாய்ஸ்' என்று குறிப்பிட்டு எழுதுங்க kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

'மறுபடியும் ஒரு காதல்' ஜோஸ்னா

கனெக்ட் ஃபிலிம் மீடியா நிறுவனத்துக்காக வாசு பாஸ்கர் இயக்கும் 'மறுபடியும் ஒரு காதல்' படத்தில் ஹீரோயின் வேடம் கட்டும் அம்மணி ஜோஸ்னா, ஜெயம் ரவியின் உறவுக்காரப் பொண்ணாம். கவிஞர் வாலி இயக்கிய 'வடைமாலை' படத்தில் ஹீரோயினாக நடித்த சரோஜாவின் சௌபாக்ய புத்திரி ஜோஸ்னா! இந்தப் படத்தில் வடிவேலு ஏற்றிருக்கும் பாத்திரம் 'போலி டாக்டர் எம்.பி.பி.எஸ்.'!

'கோகுலம்' பத்மப்ரியா

கேரள மன்னர் இயக்குநரோடு மட்டுமே அதிகமாக ஜோடி போட்ட பத்மப்ரியா ஏறக்குறைய புதுமுகமான 'ஷ்ரவணாந்த்'துடன் கோகுலம் படத்தில் நடிக்கிறார். கிராமத்தின் உன்னதங்களை உணர்வுபூர்வமாகக் காட்டும் படமாம் இது. தெலுங்கில் டூ பீஸில் நடிக்கும் பத்மப்ரியா தமிழில் மட்டும் இழுத்துப் போத்தும் ரகசியம் 'கேரள மன்னர்' இயக்குநர் போடும் கண்டிஷனோ?

போல
எம்.ப

ஒரு பக்கம் எழுத்தாளர் ஜெயமோகன், மறுபக்கம் எழுத்தாளர் எஸ்.ராமகிருஷ்ணன் இயக்குநர்களை வளைத்துப் போடுவதற்கு பி.ஆர்.ஓ. ரேஞ்சுக்கு கோடம்பாக்கத்தில் இறங்கி செயலாற்றுகிறார்களாம். எதற்கு என்கிறீர்களா...? வேறு எதற்கு? படங்களுக்கு வசனம் எழுதத்தான்.

'கல்லூரிக் காலங்கள்' படத்தின் பாடல்களை ஒன்பதாயிரம் பேர் காலர் ட்யூனாகப் பயன்படுத்துகிறார்கள் என்று புள்ளிவிவரத்தை அள்ளிப் போடு கிறார் இயக்குநர் ரெமோஷிவா. இந்தப் படத்துக்காக இவர் எடுத்த சில காட்சி களைப் பார்த்த தயாரிப்பாளர் டி.வாசுதேவன், அடுத்த படத்தை இயக்கும் வாய்ப்பளித்து படத்துக்கு 'ஞாயிறு விடுமுறை' என்று பெயரும் சூட்டிவிட்டாராம்.

# பயாஸ்கோப்

காந்தியவாதியான ஒருத்தன் சுபாஷ் சந்திரபோஸ் ஆவதுதான் 'கலவரம்' படத்தின் கதையாம். 'வால்டர் வெற்றிவேல்'க்குப் பிறகு போலீஸ் பாத்திரம் தனக்கு வெகு கச்சிதமாக அமைந்திருப்பது 'கலவரம்' படத் தில்தான் என்று பார்ப்பவர்களிடமெல்லாம் சொல்லி வருகிறாராம் சத்யராஜ். கூடவே கஞ்சி போட்ட சட்டை மாதிரி விறைப்பான கதைக்குத்தான் இனி புரட்சித் தமிழன் ராஜ் ஜியத்தில் முன்னுரிமையாம்!

இருபத்தைந்து வருட திரை வாழ்வில் அறுபத்தைந்து படங் களை இயக்கியும், இருபத்தேழு படங்களைத் தயாரித்தும் இயக்கிய எஸ்.ஏ.சந்திரசேகர் முதன் முறையாகத் தயாரிப்பாளர் என்று அளவோடு தமது பங்களிப்பை நிறுத்திக் கொண்ட படம் 'வெளுத்துக் கட்டு'. 'இந்தப் படத்தின் கதை கற்பனையல்ல... என் சொந்த வாழ்வின் சுவாரஸ்யப் பக்கங் கள்' என்கிறார் அவர்.

## டாக்டர் எஸ்.ஏ.எஸ்!

'வெளுத்துக்கட்டு' அருந்ததி

- மகிமைராஜன்

ராஜஸ்தானி மூலம் : யாதவேந்திர சர்மா சந்திரா ❖ தமிழில் : சௌரி

பிகானீர் நகருக்கு அப்பால் வறண்ட பொட்டல் வெளிக் கிராமம். ஊருக்குள் ஒரு பொது ஆழ்கிணறு, அதலபாதாளத்தில் தண்ணீர். சில வசதியான வீடுகளில் கொல்லை, தோட்டம், ஆழ்கிணறு இருக்கும். இவைகளில் ஒன்று துப்பாக்கி அத்தையின் மண்கவர் வீடு. நடுத்தர வயதைக் கடந்த, தனிக்கட்டை ஜீவன் மங்களா அம்மைக்குத்தான் அந்தப் பட்டப் பெயர்.

வீட்டுக்கு வெளியே, மண்ணும் சாம்பலும் கலந்து அடுக்களைப் பாத்திரங்களைக் கழுவிக் கொண்டிருந்தாள் மங்களா. உச்சிப்பொழுது. துலக்கிய பாத்திரம் பாண்டங்களை அடுக்களையில் அடுக்கி வைத்து விட்டு, நடுக்கூடத்தில் கட்டிலில் கால் நீட்டி விச்ராந்தியாய் கட்டையைச் சாய்த்துக் குட்டித் தூக்கம் போடவேணும். ஒரு வாரத்துக்கு வேண்டிய கலவை ரொட்டி மாவு அரைத்ததில் கைமூட்டு, தோள் பட்டை, இடுப்பு எல்லாம் வலிக்குது. படுத்து எழுந்தால்தான் தேகம் செயல்படும்.

பக்கத்து வீட்டுக்காரி (குடிசைக்காரி) மூக்குப் பொடி நெடி வீச விசாரிக்க (வம்பளக்க) வந்து விட்டாள். சம வயசு.

''வாங்க சாம்லிலி சித்தி! தூங்கி எழுந்திருச்சிட்டீங்களா? நான் இனிமேலைக்குத்தான் கட்டையைச் சாய்க்கணும். என்ன சேதி...?''

''ஏ மங்கலி! ஊராருக்கெல்லாம் கரிசனம் காட்டுறதே உனக்கு பொழைப்பாயிடிச்சில்லே? வம்பை விலைக்கு வாங்குறதை நிறுத்த மாட்டியா...?''

''என்ன ஆச்சு இப்போ, சின்னம்மா?''

''அந்த துலுக்கச்சி யமனா பேகத்துக்கு நீ ஏன் பரிஞ்சுக்கிட்டு பஞ்சாயத்து பண்ணணும்? அவள் பிள்ளைகள் இரண்டு பேரும் உம் பேரிலே வன்மம் வைக்காமல் இருப்பாங்களா? உனக்கு ஏன் வீண் பொல்லாப்பு?'' - சாம்வலி கடிந்தாள்.

''சின்னம்மா! மேமனாபேகம் ஏழை, விதவை. நான் கலியாணமாகி இங்கே வந்த நாளிலிருந்து பழக்கம். பாசம் நேசம் உள்ள உபகாரி. இரண்டு பிள்ளைகளையும் வளர்த்து ஆளாக்க அவள் பட்டபாடு! பசி -பட்டினின்னு



# துப்பாக்கிக்காரி

## பிறமொழிக்கதை-12

தவிக்கிற போது எங்கிட்டேதான் வந்து கேட்பாள். நகை நட்டை அடகு வைத்து பணம் வாங்கிப் போவாள். நாணயமாய் வட்டியோடே திருப்பிக் கொடுப்பாள். இப்போ முதுமை வந்து வியாதியும் வந்து அவதிப்படுகிறபோது, வளர்ந்த பிள்ளைகள் வீட்டை விட்டுத் துரத்திட்டானுக. எங்கிட்டே வந்து, 'தாயே, காப்பாத்து!'ன்னு விழுந்தாள். நல்ல காலம், வீடு அவள் பேரிலே இருந்தது. உடனே போலீசிலே



புகார் கொடுத்து பஞ்சாயத்து பண்ண வெச்சேன். மூணு மூணு மாசத்துக்கு ஒவ்வொரு பிள்ளையும் அம்மாவைத் தன் பொறுப்பிலே வைத்து சவரட்சணை பண்ணணும்னு தீர்ப்பு வாங்கிக் கொடுத்தேன். அந்தப் பிள்ளைகளும் சம்மதிச்சு வைக்கக்கிறாங்களே. கைமாத்து - கடன்னு எங்கிட்டேதானே வர்றானுக. இதிலே வன்மம் என்ன வேண்டிக்கிடக்குது?''

''சரி, சரி! ஊருக்கு உழைக்கிறே. ஆமாம், நீ கலியாணமாகி இங்கே வந்து ஆறு ஏழு மாசம் கூடி வாழ்ந்திருக்கிறே. மிலிட்டிரிக்கார புருசன் நாட்டுக்குப் பாடுபட்டுப் போய்ச் சேர்ந்திட்டான். அவனையே நினைச்சுக்கிட்டு நீ வாழறே.

பரோபகாரியாய் இருக்கிறே!'' -சாம்விலி அங்கலாய்த்தாள்.

''யாருக்குத்தான் கட்டின புருஷன் ஞாபகம் இராது? சேர்ந்து வாழ்ந்த வரைக்கும் சந்தோஷமாய், சௌக்கியமாய் வெச்சிருந்தாரு அந்த நல்ல மனுஷன்.




எனக்கு இந்த வீடு, தோட்டம், கேணி, பென்ஷன், இந்தத் துப்பாக்கி - எல்லாமே அவர் ஞாபகம்தானே, உறவுதானே?'' மங்கலியின் கண்கள் கலங்கின.

''கிளம்புறேன் மங்கலி! உனக்குப் புத்தி சொல்ல வந்த எனக்குப் புத்தி இல்லைங்கிறதைப் புரிஞ்சிக்கிட்டேன். நீ படுத்துத் தூங்கு.''

மங்கலி தேய்த்த - கழுவிய பாத்திரங்களை அடுக்களையில் கொண்டு வைத்தாள். கதவை அடைத்துவிட்டு, கட்டிலில் கால்நீட்டிப் படுத்தாள்.

வாசல் பக்கம் உரத்த குரலில் கூப்பிடுவது கேட்டது, ''துப்பாக்கி அத்தை...! துப்பாக்கி அத்தை...!'' கூடவே கதவைத் தட்டல்.

''யாரது?'' எழுந்து வந்து கதவைத் திறந்து பார்த்தாள்.

''அத்தைம்மா! நான்தான் குல்பியா. உதவி கேட்டு வந்திருக்கிறேன்'' - முதிர்ந்த வாலிபன். முன் அறிமுகம் இல்லை.

''எங்கே இருக்கிறே? உன் அப்பா-அம்மா யாரு...? என்ன உதவி...?''

தெருப்பக்கம் பார்த்தாள். பசு மாடு குப்பையில் கிடந்த பிளாஸ்டிக் கவரைச் சுவைத்துக் கொண்டிருப்பதைக் கண்டதும் பதறிப் போனாள். ஓடிப் போய் பசுவின் வாயிலிருந்து பிளாஸ்டிக் கவரைப் பிடுங்கி தூர எறிந்தாள். பசுவிற்கு வீட்டிலிருந்து ரொட்டி, கீரைக்கட்டு, வெல்லக் கட்டி களைத் தின்னக் கொடுத்தாள். பசுவைத் தெருக்கோடிக்கு விரட்டி விட்டுத் திரும்பி வந்தாள். ''யாரப்பா நீ? சொல்லு! இந்த பால்காரன் சுவாராம் படுபாவி; பால் கொடுக்கிற பசுவுக்குத் தீனி போடாமல் தெருத் தெருவாய் குப்பை மேய விட்டிடறான், கசாப்புக்காரப் பயல்!...ம், நீ சொல்லு!''

''துப்பாக்கி அத்தை! கும்புடுறேன். அனுமார் கோவில் பக்கம் இருந்தாரே தச்சனார் ராதாகிசன், அவரு மகன் நான். பேர் குல்பியா. என் பெண்சாதி நிறைமாசக் காரி. வலி எடுத்திருக்கு, தவிக்கிறாள். பிரசவ செலவுக்குப் பணம் வேணும். கைமாத்தாய் கொடுங்க. ஒரு மாசத்திலே அடைச்சிடறேன் வட்டியும் அசலும்.''

''மஞ்சள்-வெள்ளை ஏதாவது கொண்டு

வந்திருக்கியா? (தங்கம்-வெள்ளி நகைக்கு இடுகுறிப் பெயர்.) அடமானமில்லாமே கொடுக்கிறதில்லை.''

''ஏதும் இல்லை தாயே! தயவுசெய்யுங்க. பிரசவ மருந்துவம் இல்லாமே பெண்டாட்டி செத்துடுவாள்.''

மங்கலி நெகிழ்ந்து போனாள். நிதானித்துக் கொண்டு, ''தம்பி! பொய் சொல்லி ஏமாத்துகிறவங்ககிட்டே நிறைய ஏமாந்திருக்கிறேன். கடன் வாங்குகிற உப்பு கூட இனிக்கும். அதையும் ஏமாத்தி வாங்கினால் அதுவே நஞ்சாய் மாறி ஏமாத்துகிறவனைக் கொன்னுடும், தெரிஞ்சுக்க!'' என்றாள்.

இதைக் கேட்டதும் அந்த வாலிபன் தலைசாய்த்து திரும்பிப் போனான். கதவை அடைக்க முயன்ற மங்கலி ஒரு நோஞ்சல் பெண் வேகமாய் வருவதைக் கண்டு வெளியே வந்தாள். வந்த பெண், ''துப்பாக்கி அத்தை! அந்தக் கேடு கெட்ட ஆளு திரும்பி வர மாட்டான். என்னைப் பார்த்திட்டானில்லே, ஓடிட்டான்'' என்றாள்.

மங்கலி சொன்னாள், ''பாவப்பட்ட பயல், அவன் பெண்சாதிக்குப் பேறுகால வலி எடுத்திடிச்சாம். பணம் கடன் கேட்டு வந்தான். கொடுத்திருக்கலாம்...''

வலியும், வேதனையும் பிடித்து நலிந்து போயிருந்த அப்பெண், ''தாயே! அவன் பெண்சாதி நான்தான். தினமும் படுத்துற கொடுமை தாளமுடியல்லை, தாயே!'' - விம்மி அழுதாள்.

''அடப்பாவமே...!'' மங்கலி அதிர்ந்துபோனாள்.

''அத்தையம்மா! என் கேடுகாலம், என் ஆயி-அப்பன் இந்தக் களவாணி - கழிசடைக்குக் கட்டிக் கொடுத்திட்டாங்க. என்னை வாட்டி வதைக்கிறதிலே மாமனும்-மாமியும் ஒக்குமத்து. இதப்பாருங்க என் உடம்பெல்லாம் கம்படி - கயிறடி பட்டு ரத்தம் வழிஞ்சு, புடைச்சு நீலிச்சுப் போயிருக்குது. வீட்டிலே ஒரு செப்பு-பித்தளைப் பாண்டம் மிஞ்சலை. எல்லாத்தையும் வித்துக் குடிச்சிட்டான், பாவிப்பயல். அவன் அப்பனும் ஆயாளும் ஊரைவிட்டுப் போயிட்டாங்க. என் அப்பா-ஆத்தாள் செத்திட்டாங்க. போக்கிடம் இல்லாமே இந்த ராட்சசன்கிட்டே சிக்கித் தவிக்கிறேன், தாயே!'' சேலையை விலக்கிக்




காட்டி விக்கி விக்கி அழுதாள்.

''ராமா...! ராமா...!'' மங்கலி பரிதவித்துப் போனாள்.

''தாயே! இனிமேலே என்னாலே அந்த நரகத்திலே வாழ முடியாது. இருமல் வியாதி

வாட்டி வதைக்குது. கூலி வேலைக்குப் போகத் திராணி இல்லை. நீங்கதான் எனக்கு வாழ வழி செய்யணும், தாயே! இல்லாட்டி, கிணத்திலே விழுந்து சாகிறதுதான் எனக்கு விதி.''

மங்கலி விக்கித்து நின்றாள். நண்பகல் சாயத் துவங்கியது.

''உன் பேர் என்ன? இங்கே எப்படி வந்தே?''

''பார்வதின்னு பேரு. இந்தக் களவாணிப் புருசன் என்னைக் காரணம் காட்டி கடன் வாங்க அலையுறான். அதனாலேதான் இவன் பின்னேயே போய் நிசத்தை நிரூபிக்கிறேன்.''

''என்னை என்ன செய்யச் சொல்லுறே?''

''தாயே! எனக்கு அடைக்கலம் கொடுங்க. சாகிறவரைக்கும் உங்களுக்குத் தொண்டு செஞ்சுக்கிட்டு இங்கியே கிடக்கிறேன்.''

''உன் புருசன் வந்து வம்பு செய்தால்?''

''வரமாட்டான். நீங்க துப்பாக்கி வெச்சுருக்கிறீங்க. சுட்டுப்பிடுவீங்கன்னு பயமிருக்கும். நான் முந்தியே போலிசிலே போய் புகார் கொடுத்திருக்கிறேன்.''



**செ**ன்னையில் டிராஃபிக்ஜாம் வரும்படி முமைத்கானின் கவர்ச்சி போஸ்டர் ஆக்ரமித்து இருந்தது ஆக்டோபஸ் போல. 'யார்' கண்ணன் இயக்கத்தில் இரட்டை வேடத்தில் நடிக்கும் இந்தப் பௌர்ணமி நாகத்திற்கு சம்பளமும் ரெட்டையாம்! கோலிவுட் நடிகைகள் கதிகலங்கி இருக்கிறார்களாம்... அடித்தட்டு மக்களின் செல்வாக்கை அள்ளிக் கொள்வாரோ என்று!

- நியூஸ்பாய்

**ம**ங்கலிக்குப் பழைய நினைவு வந்தது.

கணவன் மரித்தபின் அம்மாவும், அப்பாவும் இங்கு வந்து ஒரு மாதம் தங்கியிருந்தார்கள். இருபத்து மூணு வயது. ஒருநாள் அம்மா சொன்னாள், ''மகளே! மறுவிவாகம் செய்து கொள்ளேன். வாழவேண்டிய பருவம். தனிக்கட்டையாய் வாழ முடியுமா?''

''இல்லை அம்மா! எனக்கு இதுதான் விதித்த விதி. தேசத் தியாகிக்கு மனைவியாய் இருந்த பெருமையோடே வாழ்ந்திடுறேன். இனி இந்த ஊர்க்காரங்க எல்லாரும் தான் எனக்கு சொந்த-பந்தம்.''

பெற்றவர்கள் மனக்குறையோடு ஊர்திரும்பினார்கள்.

**பா**ர்வதி மங்கலி காலில் விழுந்து. ''தாயே! நீங்க கைவிட்டால் ஊர்க்கேணியிலே போய் விழுறதுதான் எனக்கு விதி'' என்றாள்.

''அழாதே, பார்வதி! இனிமேலே நீ என் மகள். உனக்கு நான், எனக்கு நீ! வா...!'' பார்வதியை அணைத்து வீட்டுக்குள் அழைத்துப் போனாள் துப்பாக்கிக்காரி. ●

அமரர் கல்கி

# அபிப்பிராயத்தின் பெறுமானம்

கல்வெட்டுகள்



விவாதம் ஏன் ஏற்படுகிறது? அபிப்பிராய பேதத்தினால். ''சென்ற வருஷத்தைவிட இவ் வருஷம் வெயில் கடுமை'' என்று நான் அபிப் பிராயப்படுகிறேன். ''ஆமாம், வெயில் கடுமைதான்'' என்று நீரும் அபிப்பிராயப்படுகிறீர். நமக்குள் விவாதம் இல்லை. ''இந்தக் கட்டுரை நன்றாயிருக்கிறது'' என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ''நன்றாயில்லை'' என்று நீர் அபிப்பிராயப்படுகிறீர். நமக்குள் விவாதம் எழுகின்றது. ஆதலின், விவாதத்துக்கு அடிப்படை அபிப்பிராய பேதம் என்று ஏற்படுகிறது.

இரண்டு பேர் சண்டை போட்டால், அவர்கள் எதற்காகச் சண்டை பிடிக்கிறார்களோ அது, சண்டை பிடிக்கும்படியான யோக்யதை உள்ளதா என்று பார்க்க வேண்டும். ஆறறிவுள்ள மனிதனுக்கும், ஐந்தே அறிவுள்ள பிராணிகளுக்கும் வித்தியாசம் இதுதான். ஒரு நாய் ஒரு தெருவில் வாசம் செய்கின்றது. இன்னொரு நாய் தனது தேச யாத் திரையினிடையே அந்தத் தெருவின் வழியே போக நேர்கின்றது. ''என் தெருவில் நீ எப்படி வரலாம்?'' என்று ஊர் நாய் கேட்கிறது.



''உன் அப்பன் வீட்டுத் தெருவோ? பொதுச் சாலையில் போவதற்கு நீ என்ன கேட்கிறது?'' என்று அசலூர் நாய் சொல்லுகிறது. இதிலிருந்து அவைகளுக்குள் விவாதம் எழுகிறது. ''அட முட்டாள் நாய்களா!'' என்று நாம் சொல்லுவோம்.

''எந்த நாய் தெருவோடு போனால் எனக்கென்ன?'' என்று ஊர் நாய் சும்மா இருந்திருக்கலாம். ''உன் தெருவும் ஆச்சு, உன் மூஞ்சியும் ஆச்சு'' என்று அசலூர் நாய் வேறு வழியாய்ப் போயிருக்கலாம்.

ஆகவே, ஆறறிவுடைய மனிதர்களாகிய நாம், விவாதம் தொடங்குவற்கு முன்னால், விவாதிப்பதற்குரிய விஷயம் தக்க பெறுமானமுள்ளதா என்று பார்த்தல் அவசியம். விவாதம் என்பது அபிப் பிராயத்துக்காகத்தான் எழுகின்றது என்று முன்னமே பார்த்தோம். எனவே, அபிப்பிராயத்தின் பெறு மானம் என்ன என்பதை ஆராய வேண்டும். இது விஷயமாக நான் தீவிர ஆராய்ச்சி நடத்தி, மனிதர்களுடைய அபிப்பிராயத்தின் பெறு மானம் என்ன என்பதை ஐயந்திரிபறக் கண்டு பிடித்திருக்கிறேன்.

(ஆனந்த விகடன், 1.6.1933)





# ஆஸ்கர் கண்டுகொள்ளாத மராத்திப் படம்!

- நெய்வேலி பாரதிக்குமார்

ஒரு திரைப் படத்துக்குப் பின்னால் ஒரு மாநிலமே நின்று நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? மராத்தித் திரைப்படமான Shwaas-க்கு அந்தப் பெருமை உண்டு! இந்தப் படத்துக்கு எப்படியும் ஒரு ஆஸ்கர் விருதேனும் வாங்கிவிட வேண்டும் என்ற ஆர்வம் அனைவரின் ஈடுபாட்டிலும் இருந்தது. ஷவாஸ் - அப்படி என்ன வித்தியாசமான படம்?

புனேயில் நடந்த ஒரு உண்மைச் சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டு மராத்தி பெண் எழுத்தாளர் மாதவி கர்புரே எழுதிய கதைதான் shwaas.

முதியவர் விசாரே (அருண் கடவாலே) தன் பத்து வயது பேரக்குழந்தை பரசுராமுக்கு ஏற்பட்ட பார்வைக்குறைவை சரி செய்ய பட்டணத்துக்கு வந்து, பிரபல மருத்துவர் ஸானேவிடம் காண்பிக்கிறார்.

பத்து லட்சம் பேரில் ஒருவருக்கு ஏற்படும் retino blastoma எனப்படும் கண் புற்று நோயைக் கண்டு பிடிக்கும் ஸானே... அறுவை சிகிச்சை தவிர வேறு வழியில்லை, அதுவும் விரைவில் செய்தாக வேண்டுமென்கிறார். பரசுராமின் உயிரைக் காக்க, பார்வை பறிபோவதை தவிர்க்க முடியாதென்கிறார்.

முதலில் அழுது ஆர்ப்பாட்டம் செய்த பரசுராமுக்கு நிலைமையின் தீவிரம் புரிபட, குறித்த தேதியில் மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறான். எதிர்பாராத விதமாய் அறுவை சிகிச்சை ஒரு நாள் தள்ளிப் போகிறது. படுக்கையிலேயே நாள் முழுதும் இருந்த அவனை சமாளிக்கப் பாடாய்ப் படுகிறார் விசாரே. மூடிக்கிடக்கும் ஜன்னல்களைத் திறக்கும் போது மட்டுமே அமைதியாகிறான் அவன். வெளியுலகக் காட்சிகளுக்காக ஏக்கம் புரிகிறது விசாரேவுக்கு.





திடீரென மருத்துவமனை அறையிலிருந்து மாயமாகின்றனர் பாட்டனும் பேரனும். மருத்துவர் ஸானேயும் நிர்வாகமும் பதைக்கின்றனர். தகவல் வெளியே கசிய பத்திரிகைகளும், ஊடகங்களும் மருத்துவமனைக்குப் படையெடுத்து யூகங்களாலும் கேள்விகளாலும் திணறடிக்கின்றனர்.



பொழுது சாயும் நேரத்தில் விசாரேயும் பரசுராமும் மருத்துவமனைக்குத் திரும்பு கின்றனர். பரசுராம் கையில் ஏகப்பட்ட விளையாட்டு பொம்மைகள்.

பரசுராமுக்கு பார்வையிருக்கப் போகும் இந்த ஒரே ஒரு நாளாவது அறைக்குள் அடைந்து கிடக்காமல் புறவுலகின் எழில் கொஞ்சும் காட்சிகளைக் கண்டு ரசிக்கவும், அவனையொத்த வயதினருடன் குதூகலமாக விளையாடி மகிழவும் தான் வெளியே அழைத்துச் சென்றதாகக் கூறுகிறார் விசாரே.

அறுவை சிகிச்சைக்குப்பின் பரசுராம் ஒளியிழந்த தன் விழிகளைக் கண்ணாடிக் குள் ஒளித்து ஊர் திரும்ப, ஊர் மக்கள் அனைவரும் திரண்டு அவனை வரவேற்க

விற்றுக் கிடைத்த ரூ.30,000 பணத்தைத் தந்தனர். வேறொரு பள்ளி மாணவர்கள் பகுதி நேர வேலையாக கார்களைத் துடைத்து அதில் கிடைத்த தொகையை அனுப்பினர். அமிதாப்பச்சன் ஒரு லட்ச ரூபாயும், கோவா அரசு 2.5 லட்சமும், மகாராஷ்டிர அரசு 15 லட்சமும் தந்தனர். அமெரிக்காவிலுள்ள மகாராஷ்டிர மக்களிடம் திரட்டிய பணம் மற்றும் மகாராஷ்டிர நாடக அமைப்புகள் 65,000 ரூபாயும், சித்தி விநாயகர் ஆலய நிர்வாகிகள் தனியொரு உண்டியல் மூலம் திரட்டித் தந்த சிறு தொகையும் பயன்படுத்தி 14 முறை ஆஸ்கர் குழுவினர் பார்ப்பதற்காக





நிற்பதுடன் படம் நிறைவடைகிறது.

இவ்வளவு அழுத்தமான படத்தை ஆஸ்கரில் உள்ள சிறந்த அயல்மொழித் திரைப்படம் என்ற கேட்டகரியில் விருது பெறவைக்க, மகாராஷ்டிரமே திரண்டதில் ஆச்சரியமில்லையே.

இப்படத்தைத் தயாரிக்க ஆன செலவை (30,000,00) விட அதிக தொகை படத்தை முன்னிறுத்த (promote) தேவைப்பட்டது. ஆஸ்காரின் 5835 உறுப்பினர்கள் கண்டு அவர்கள் மனத்தில் படம் பற்றிய மதிப்பை பதிய வைக்க ஆகும் செலவை ஈடுகட்ட, மகாராஷ்ட்ராவில் உள்ள ஜோகேஸ்வரி பள்ளிக் குழந்தைகள், விளக்குகள் தயாரித்து

இப்படம் திரையிடப்பட்டது. ஆனால், ஆஸ்கர் பார்வையில் ஷாவாஸ் காணாமலே போய்விட்டது. ஒரு விருதையும் ஷாவாஸ் பெறவில்லை. ஆனால், சிறந்த படங்களை இனங்காணும் இந்தியக் கண்களுக்கு ஷாவாஸ் தென்பட்டு விட்டது. கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகளாக இந்திய அரசு வழங்கும் தங்கத் தாமரை விருதை மராத்தித் திரைப்படங்கள் பெறவே இல்லை. ஷாவாஸ் இப்போது அந்தப் பழியைப் போக்கிவிட்டது.

அத்தோடு இப்படத்தில் சிறுவனாக நடித்த அஸ்வின் சிட்டாலே சிறந்த குழந்தை நட்சத்திரத்துக்கான விருதையும் தட்டிச் சென்றுவிட்டான்!

என்றும் உங்களுடன்
மங்கையர் மலர்
VBC Jewellery
HOUSE OF VUMMIDI
இணைந்து வழங்கும்



அன்புமிக்க வாசக/ வாசகியருக்கு வணக்கம்!

சென்ற ஆண்டு, நமது மங்கையர் மலரில், 'லக்கி லட்டு!' என்றொரு பகுதி சக்கை போடு போட்டது நினைவிருக்கலாம். புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தி வைக்கும் அந்த நூதனத் திட்டத்துக்கு, நீங்க தந்த வரவேற்பு எங்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது. அதன் பலனாக, நமது வாசகர் வட்டம் மேலும் விரிவடைந்தது.

தற்போதும், அதே போன்றதொரு ஜொலிக்கும் திட்டத்துடன் உங்களை நாடி வந்துள்ளோம். தரமும், பயனும் நிறைந்த, மதிப்பு மிக்க இந்தப் பல்சுவை இதழை, உங்கள் மங்கையர் மலரை, நமக்குத் தெரிந்த சகோதரிகள் அனைவருமே படித்துப் பயனடைந்து, மகிழ வேண்டும். இன்னும் பல நூறு குடும்பங்களை மங்கையர் மலர் சென்றடைந்து, நமது அன்பு வட்டம் விரிவடைய வேண்டும் என்ற நோக்கத் துடன் 'வைர மங்கை' என்ற திட்டம் ஒன்றை அறிமுகப்படுத்துகிறோம்.

நீங்க மங்கையர் மலரின் 'வைர மங்கை'யாக ஜொலிக்கணுமா? இதோ..

## பவள மங்கை....







* நீங்க மங்கையர் மலரின் தற்போதைய வாசகியா? சந்தா தாரரா? அப்ப கண்டிப்பா நீங்க இதில் பங்கேற்கலாம். நீங்கதான் எங்களுடைய 'பவள மங்கை!'

* பவள மங்கையான நீங்கள் ஒவ்வொருவரும், குறைந்த பட்சமாக 5ம், மற்றும் அதன் பெருக்கல் இலக்கங்களிலும் புதிய சந்தா தாரர்களை, முத்து மங்கைகளை, மங்கையர் மலருக்கு அறிமுகப்படுத்த வேண்டும்.

* இந்த அறிவிப்பினைத் தொடர்ந்து 191 பக்கத்தில் இடம் பெற்றுள்ள 'வைர மங்கை' சந்தா படிவத்தைப் பயன்படுத்தலாம். நகல் எடுத்தோ / மங்கையர் மலர் வெப் சைட்டிலிருந்து டவுன்லோட் செய்தோ பயன் படுத்தலாம்.

* உங்கள் தோழியருக்கோ, உறவினர்களுக்கோ இந்தச் சந்தா படிவத்தைத் தந்து, முழுமையாக நிரப்பச் செய்து அவர்களிடமிருந்து தலா ரூ.250/- (ஓராண்டு சந்தா) பெற்று ஒருமித்தமாக அனுப்பலாம். அல்லது நீங்களே

# வைர மங்கை' -சிறப்பு சந்தா திட்டம்!*



உங்களது அன்பளிப்பாக 5 பேருக்கு சந்தா பரிசு அளித்து, படிவத்தை நிரப்பி அனுப்பலாம். உங்களைப் பற்றிய முழு விவரங்களுடன், நீங்கள் யாருக்குப் பரிசளிக்கிறீர்களோ அவர்களது பெயர், முழு முகவரி,. இ-மெயில், மொபைல் விவரங்கள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். குறைந்த பட்ச 5 சந்தாவுக்கான கட்டணத் தொகையான ரூ.1,250 டிமாண்ட் டிராஃப்ட்/ மணியார்டர்/ சென்னை காசோலையாகவோ அனுப்பி வைக்கவும்.

* நீங்கள் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள் ஒவ்வொருவருக்கும் ரூ.100/- பெறுமானமுள்ள பரிசு அளிக்கப்படும். இந்த நல்ல செய்தியை பவள மங்கையான நீங்களே அவர்களுக்குத் தெரிவிக்கலாம்.

* முத்து மங்கைகளை அறிமுகப் படுத்தும் ஒவ்வொரு பவள மங்கைக்கும் ரூ.250/- மதிப்புள்ள பரிசு உண்டு.

## மரகத மங்கை!




குறைந்த பட்சம் 30ம், அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையிலும் புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் முதல் 20 அதிர்ஷ்ட சாலி வாசகர்கள்தான் மங்கையர் மலரின் மரகத மங்கைகள். உங்களுக்கு VBC Jewellery வழங்கும் ரூ. 1500/- ▸▸

முதல் மாதம் அறிமுகப்படுத்தப்பட்ட முத்து மங்கைகள் ஒவ்வொருவரும் அடுத்த மாதம் பவள மங்கைகளாக உயர்ந்து மேலும் 5 முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தலாம். அதுமட்டுமா, முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தும் பவள மங்கைகள், அடுத்து வரும் மாதங்களில் மரகத மங்கைகளாக உயரும் வாய்ப்பைப் பெறுவீர்கள்.

இப்படியாக ஒரு ஜோதியிலிருந்து இன்னொரு புதிய விளக்கு ஏற்றப்படுவது போல, இந்த சந்தா ஒளி - ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து நடைபெறும். சென்னை VBC Jewellery வழங்கும் எண்ணற்ற பரிசுகள் பெறவும் முடியும்! சந்தா படிவங்கள் தொடர்ந்து 6 மாதங்களுக்கு மங்கையர் மலர் இதழில் வெளி வரும்.

பெறுமானமுள்ள அழகிய பரிசு காத்திருக்கிறது. அது மட்டுமா? மரகத மங்கையரான வாசகியர், ஆறாவது மாத இறுதியில் நடத்தப்படும் வைர மங்கை பம்பர் பரிசுக் குலுக்கலில் கலந்து கொள்ளும் தகுதியைப் பெறுவீர்கள். மேலும், முப்பது சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் மரகத மங்கைகள் தங்களது பாஸ்போர்ட் அளவு புகைப்படங்களை அனுப்பி வைக்க வேண்டும். மரகத மங்கைகளின் புகைப்படங்கள் அவர்களைப் பற்றிய சிறு குறிப்புடன் மங்கையர் மலர் இதழ்களில் பிரசுரிக்கப்படும்.

## வைர மங்கை!

மங்கையர் மலரின் அதிகபட்ச சந்தா சேகரிப்புக்குப் பம்பர் பரிசு!




ஆறு மாதங்கள் கழித்து, 30ம் அதற்கு மேலும் சந்தாதாரர்களை அறிமுகப்படுத்திய மரகத மங்கை வாசகர்களிலிருந்து 'டாப் 5' வாசகர்கள், மொத்த சந்தா சேகரிப்பு எண்ணிக்கையின் அடிப்படையில் தேர்வு செய்யப்பட்டு, 'வைர மங்கை' என்ற பட்டப்பெயர் பெற்று, சென்னை VBC Jewellery வழங்கும் தலா ரூபாய் 10,000/- பெறுமானமுள்ள பம்பர் பரிசும் பெறுவீர்கள்.

நமது மங்கையர் மலரில் இந்த ஜூலை இதழ் தொடங்கி, மாதா மாதம் 'வைர மங்கை' சந்தா படிவம் வெளியாகும். ஆறு மாதங்களுக்குத் தொடர்ந்து சந்தா சேகரிப்பு எண்ணிக்கையின் அடிப்படையில் மாதா மாதம் தேர்வான முதல் 20 மரகத மங்கை வாசகர் பட்டியல், தொடர்ந்து புகைப்படங்களுடன் வெளியாகும். இந்தத் திட்டம் இந்த ஜூலை இதழ் தங்கள் கைகளுக்கு வந்து சேர்ந்த அதே வினாடியில் (01.07.2010 முதல்) செயல்முறைக்கு வந்துவிடும். பரபரப்பாக, சுறுசுறுப்பாக இயங்கி ஜூலை மாத இறுதிக்குள் படிவத்தைப் பூர்த்தி செய்து, 30க்கும் மேற்பட்ட சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தி மரகத மங்கையாக முடி சூட்டிக் கொள்ளுங்கள்.

ஆறாவது மாத இறுதியில், பம்பர் பரிசு பெறும் 5 வைர மங்கை நபர்கள் சென்னைக்கு வரவழைக்கப்பட்டு வி.பி.சி நகைக்கடை ஷோரூமில் பரிசுகள் தந்து கௌரவிக்கப்படுவீர்கள். 'வைர மங்கை' வாசகர்களின் படங்களும் செய்திகளும் நமது இதழில் வெளியாகும்.

என்ன...உங்களுக்கும் வைர மங்கையாக ஆசையா? உடனே... செயல்பட்டு... சந்தா சேகரிக்க ஆரம்பியுங்க.

அன்பு வட்டத்தை விரிவுபடுத்துங்க! பரிசுகளை வெல்லுங்க! வைர மங்கையா ஜொலிங்க!

**மேலும் விவரங்களுக்கு**
**95661 95074, 94443 83465**

• விதிமுறைகளுக்கு உட்பட்டது

முத்து மங்கை, பவள மங்கை, மரகத மங்கை மற்றும் வைர மங்கை... இத்திட்டத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் இவர்களுக்கான பரிசுகளையும் சிறப்புப் பரிசுகளையும் வழங்குவோர் சென்னை

**VBC Jewellery**
HOUSE OF VUMMIDI

## மங்கையர் மலர் - VBC இணைந்து வழங்கும் 'வைர மங்கை' சிறப்பு சந்தா திட்டம்

அன்பு அனுஷா நடராஜனுக்கு, பவள மங்கையான நான் (தற்போதைய மங்கையர் மலர் வாசகி), மங்கையர் மலரை, 5 முத்து மங்கைகளுக்கு அறிமுகப்படுத்துகிறேன். தாங்கள் கொடுத்துள்ள இந்த படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து, 5 ஓராண்டு சந்தாதாரர்களின் தொகையாக, ரூ.1250/- மங்கையர் மலர் என்ற பெயரில் டி.டி/M.O மூலம் இணைத்துள்ளேன். என்னுடைய 5 முத்து மங்கை தோழிகளுக்கும், மங்கையர் மலர் இதழை அடுத்த மாதத்திலிருந்து அனுப்பி வைக்கவும். எனக்கும் என் தோழிகளுக்குமான பரிசுகளையும் அனுப்பி வைக்கவும். மேலும் பல முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த என்னால் இயன்றவரை முயலுகிறேன்.

**பவள மங்கை**

எனது பெயர் :..........................................

முகவரி:..........................................

..........................................

..........................................

சந்தா எண்: (தாங்கள் சந்தாதாரராக இருந்தால்)

..........................................

☏போன்: ..........................................

ஈமெயில்..........................................

**நான் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள்:**

1. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

☏போன்:..........................................

ஈமெயில்..........................................

2. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

☏போன்:..........................................

ஈமெயில்..........................................

3. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

☏போன்:..........................................

ஈமெயில்..........................................

4. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

☏போன்:..........................................

ஈமெயில்..........................................

5. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

☏போன்:..........................................

ஈமெயில்..........................................

உறையின் மீது 'வைர மங்கை' என்று குறிப்பிட்டு அனுப்பவும்

**அனுப்ப வேண்டிய முகவரி**

*மங்கையர் மலர் சந்தா பிரிவு, மங்கையர் மலர்,*
*கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,*
*ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032*

இப்படிக்கு

தேதி:..........................................





கிட்டத்தட்ட பதினைந்து ஆண்டுகளாக மியான்மர் நாட்டில் ஜனநாயக ஆட்சி வேண்டும் என போராடி வருகிறார் சூ கி. வீட்டுச் சிறையில் வைக்கப்பட்டிருக்கும் சூ கி.யை விடுதலை செய்ய வேண்டும் என்று கோரி உலகம் முழுவதி லும் இருந்து போராட்டங்கள் நடந்து கொண்டி ருந்தாலும், மியான்மரின் ராணுவ அரசு இன்று வரை விட்டுக்கொடுக்க மறுக்கிறது.

இந்நிலையில் இதுவரை வெளிவராத சூ கீயின் அபூர்வமான புகைப்படங்கள் சமீபத்தில் முதல் முறையாக 'திகார்டியன்' இதழில் வெளிவந்துள்ளன. பர்மிய அரசாங்கப் பாஸ்போர்ட்டில் இறுக்கமான முகத்துடன் இளவயது சூ கி. சிவப்பு உடையும் வெட்கப் புன்னகையும் அணிந்து, தன் கணவர் மைக்கேல் ஆரிஸுடன் நிற்கும் 26 வயது சூ கி. பூடானின் பனி படர்ந்த மலைப் பகுதியில் ஏகாந்தமாக வலம் வரும் சூ கி. குடும்பத்துடன் பிக்னிக் சென்று பழம் ருசிக் கும் சூ கி என பல படங்கள்.

1972-ம் ஆண்டு மைக் கேல் ஆரிஸை லண்டனில்



# அதிசயப் பெண்,





திருமணம் செய்துகொண்டார் சூ கி. இரு மகன்கள் பிறந்தனர். நோய் வயப்பட்ட தன் தாயைக் காணத் தனியே வந்த சூ கீ, வீட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். மைக்கேலுக்கு அனுமதி மறுக் கப்பட்டது. புற்றுநோயால் அவர் தாக்கப்பட்ட போதும் சூ கியைச் சந்திக்க அனுமதி கிடைக்க வில்லை. வேண்டுமானால் நீ லண்டன் சென்று பார்த்துக்கொள் என்று அரசு சூ கியிடம் சொல்லிவிட்டது. லண்டன் சென்றால் மீண்டும் மியான்மர் திரும்பமுடியாது என்பதால், சூ கி தன் கணவரைக் காண மறுத்துவிட்டார். மைக்கேல் தன் மனைவியைப் பார்க்காமலே இறந்துபோனார்.

1990-ம் ஆண்டு சூ கியின் கட்சி (நேஷனல் லீக் ஃபார் டெமாக்ரஸி) தேர்தலில் நின்று வெற்றிபெற்றது. என்றாலும், சூ கி விடுதலை செய்யப்படவில்லை. 1991-ம் ஆண்டு அவருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது. விருது வாங்க தன் இரு மகன்களை சூ கி அனுப்பிவைத்தார்.

தற்போது வெளிவந்திருக்கும் இந்தப் புகைப் படங்கள் மைக்கேலின் பிரத்தியேக ஆல்பத்தில் இருந்து பெறப்பட்டவை.

- சாய்ஸ்ரீ





# அபூர்வ படங்கள்







"டாக்டர் என் கணவர் தூக்கத்துல உளர்றார்..."

"முழிச்சிக்கிட்டிருக்கும் போது அவருக்குப் பேச வாய்ப்பு குடுங்க..."

- லெ.நா.சிவகுமார்

# பேச வாய்ப்பிருந்தா சரியாயிடும்!



"பையன் காதலிச்ச பெண்ணையே ஏன் அவனுக்குக் கட்டி வச்சிட்டீங்க?"

"அதைவிட அவனுக்குப் பெரிய தண்டனையே வேண்டாம்னுதான்."

-வி.ஜி.சத்தியநாராயணன்



'நம்ம பையனுக்கு இந்த வருஷம் எப்படியும் கல்யாணத்தை முடிச்சுடணும்!"

"நல்ல பொண்ணா அமையணுமே!"

"ஆமாம் போ. நான் அப்படியா காத்திருந்தேன்?"

-நெ.இராமன்

## அடையாளங்களைக் கைகழுவும் ரஷ்யா!

# ஸ்டாலினுக்கு எதற்குச் சிலை?

* நின்ற ஸ்டாலின்

ரஷ்யாவின் ஜார்ஜியாவில் உள்ள கோரி நகரின் மையத்தில் அமைந்திருந்தது ஆறு மீட்டர் உயரமுள்ள ஸ்டாலினின் அந்த வெங்கலச் சிலை. ஜூன் 25ம் தேதி, வெள்ளிக்கிழமை. நடு இரவு. காவல் துறையினர் துப்பாக்கியுடன் வட்டமாக நின்று கொண்டிருக்க, பணியாளர்கள் சிலையை நெருங்கினார்கள். கயிறு கொண்டு இறுக்கமாகக் கட்டினார்கள். மெல்ல, மெல்ல சாய்க்க ஆரம்பித்தார்கள்.

அதற்குள் விஷயம் எப்படியோ கசிந்து உள்ளூர் தொலைக் காட்சியில் இருந்து நிருபர்கள் கேமராவுடன் வந்துவிட்டார்கள். கேமரா கைப்பற்றப்பட்டது. நிருபர்கள் தாக்கப்பட்டனர். அதற்குள் ஸ்டாலின் சிலை தரையில் படுக்கவைக்கப்பட்டிருந்தது. ஸ்டாலினின் முகம் நிலத்தை நோக்கி திரும்பியிருந்தது. இந்த மண்ணில்தான் ஸ்டாலின் பிறந்தார்.

மீண்டும் நிமிர்த்தி, தயாராக இருந்த வண்டியில் வைத்து கொண்டு சென்று விட்டார்கள்.

இப்போது அந்த இடத்தில் போரில் (ஜார்ஜியாவுக்கும் ரஷ்யாவுக்கும் இடையில் 2008ல் நடைபெற்ற யுத்தம்) இறந்த ஜார்ஜியர்களின் நினைவுச் சின்னத்தை அமைக்கவிருக்கிறார்கள்.



* தலைகுப்புற விழுந்த சிலை

சிலை அகற்றப்பட்டதை கைதட்டி ரசிக்கும் ஒரு கும்பலை மறுநாள் காலை தொலைக் காட்சியில் காட்டினார்கள். கண்களில் நீர் கோர்த்து உறைந்து நிற்கும் சிலரையும் காட்டினார்கள். ஸ்டாலினின் இந்தச் சிலையை அகற்றவேண்டும் என்று 1950களில் முதல் முதலில் குரல் கொடுத்தவர் அப்போதைய தலைவர் நிகிதா குருஷேவ். அதற்கான பணிகளையும் அவர் ஆரம்பித்து வைத்தார். ஆனால், பலன் கிடைக்கவில்லை. ஒவ்வொரு முறையும் எதிர்ப்புகள், தடங்கல்கள், போராட்டங்கள். சோவியத் யூனியன் சிதற ஆரம்பித்தபோதே அடையாள அழிப்புகளும் தொடங்கிவிட்டன. லெனின், ஸ்டாலின் இருவரது உருவச் சிலைகளும் பல இடங்களில் இருந்து அகற்றப்பட்டன. மேற்கத்திய அரசியலையும் கலாசாரத்தையும் தழுவிக்கொண்ட இன்றைய ரஷ்யாவுக்குக் கம்யூனிசத்தை நினைவூட்டும் எந்தவொரு அடையாளமும் தேவையில்லை. இன்னும் சொல்லப்போனால் அவை ஆபத்தானவை. எனவே, கறுப்பு கொண்டு சிவப்பை அழிக்க ஆரம்பித்தார்கள். அந்த வரிசையில், ஸ்டாலினின் இந்தச் சிலையும் அகற்றப்பட்டுள்ளது.

- மருதன்




நெடு நாட்களாகப் புரிந்த தவத்தின் பயனை அடைந்தவன் போல, கவலையற்று உறங்கிக் கொண்டிருந்தான் மாமன்னன் ராஜராஜன். திசையெங்கும் சோழர்களின் புலிக்கொடி பட்டொளி வீசிப் பறக்கின்ற நிறைவோ, வெற்றிச் செய்திகளால் பொழுதுகள் அலங்கரிக்கப்படுகின்ற திருப்தியோ மட்டுமல்ல; ராஜராஜேஸ்வரம் என்ற பிரம்மாண்டத்தை, தான் நினைத்த படியே சிருஷ்டித்துவிட்ட நிறைவு அவன் முகத்தில் தென்பட்டது. அப்போதுதான் தோன்றியது அந்தக் கனவு!

அந்தக் கனவில், 'புலித்தோலை அரைக்கசைத்து, மின்னர் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்த' சிவபிரான் தோன்றிச் சொன்னார்: 'நீ எழுப்பிய ஆலயத்தில், அழகி அமைத்துத் தந்த நிழலில் நிம்மதியாக இருக்கிறேன்.' கனவு கலைந்தது; கண் விழித்தான். ஒருபுறம் ஆனந்தம்; மறுபுறம் கேள்வி! இதற்கென்ன பொருள்? யார் அந்த அழகி? அவள் அளித்த நிழல் என்றதன் பொருள் என்ன? பதில் தெரியவில்லை.

பொழுது விடிந்ததும், ஆலயத்தை எழுப்பிய ஸ்தபதிகளை அழைத்துவரச் செய்தான்.

தலைமைச் சிற்பியான வீரசோழன் குஞ்சரமல்லன் ராஜராஜப் பெருந்தச்சன், அவனுடைய பிரதம உதவியாளர்களான குணவன் மதுராந்தகனான நித்த விநோதப் பெருந்தச்சன், இலத்திச் சடையனான கண்டராதித்தப் பெருந்தச்சன் ஆகிய மூவரும் மாமன்னனை வியப்புடன் பார்த்தனர். அவ்வளவு குழப்பம் அவன்

# கண்டறியாதன கண்டேன்

## 6 விமானம்

ஸ்ரீநிவாச ராகவன்

முகத்தில்.

தான் கண்ட கனவை அவர்களிடம் விவரித்தான். கேட்ட, அவர்களின் முகத்திலும் வியப்பு தெறித்தது. தொடர்ந்து அவர்களே பேசினார்கள்: 'மன்னவா, ஆலயத் திருப்பணி நடைபெற்ற சமயத்தில், தினமும் ஒரு மூதாட்டி எங்களுக்கு மோர் கொண்டு வந்து தருவாள். அதற்கு காசு பெறமாட்டாள். ஏனென்று கேட்டால், 'மன்னர் ஆலயம் எழுப்ப முடியும். அத்தகைய பேறு எனக்கில்லை. என்னால் அந்தத் திருப்பணியைச் செய்யும் தங்களைப் போன்றவர்களுக்கு, சேவை செய்ய மட்டுமே முடியும்' என்று சொல்வாள். திடீரென்று அவள் வரவேயில்லை. தானே மனமுவந்து உதவிய அந்தத் தாய்க்கு என்னவாயிற்று என்ற கவலை எங்களுக்கு ஏற்பட்டது. தேடிப் போனபோது, அவள் படுத்த படுக்கையாய்க் கிடந்தாள்.

அவள் குடிசையை அமைந்திருந்த இடத்தில், ஒரு பாறை புதைந்திருந்தது. அதை காட்டிய அவள், 'என்னால் உங்களுக்கு உதவ முடியாமல் போய்விட்டது. என்றாலும், என் மனம் கேட்கவில்லை. இதோ, இந்தப் பாறையை ஆலயத் திருப்பணியில் நீங்கள் பயன்படுத்திக் கொண்டால், நான் மிகவும் நிறைவடைவேன்' என்று சொன்னாள். நாங்களும் அதைப் பெயர்த்துக் கொண்டு வந்தோம். அதை மறந்தும் போய்விட்டோம். தாங்கள் சொன்ன பிறகுதான் நினைவுக்கு வருகிறது. சிகரத்துக்காக நாங்கள் தேர்வு செய்த கல், அந்த மூதாட்டியின் இல்லத்திலிருந்து கொண்டு வந்தது தான். அதைத்தான் செதுக்கி விமானத்தில் சிகரமாகப் பொருத்தினோம்.

ராஜராஜனின் முகத்தில் ஆச்சர்யம், பரவசம், உற்சாகம் எனப் பலப்பல உணர்ச்சிகள்.

ஈசனின் உள்ளம் இந்தப் பிரம்மாண்டத்தில் குளிரவில்லை; அந்த ஏழையின் அடக்கத்தில் நிறைந்திருக்கிறது என்பதும் ராஜராஜனுக்குப் புலப்பட்டது. தஞ்சைக்கு அருகில் உள்ள வல்லத்தில் இருந்து அந்தக் கல் கொண்டு வரப்பட்டது. அதை மேலே கொண்டு செல்வதற்காக, சுமார் ஏழு கிலோமீட்டர் தூரத்துக்கு சாரம்

* தஞ்சைப் பெரிய கோவில்

மட்டுமே அமைக்கப்பட்டது. அந்த இடத்துக்கு, 'சாரப்பள்ளம்' என்று பெயர். தஞ்சையில் உள்ள 'அழகி குளம்', அந்த மூதாட்டியின் பெயரால் அமைந்தது என்பார்கள். சிவ பாத சேகரன் என்றும் பெயர் கொண்ட அந்த மாமன்னன், தஞ்சைப் பெரிய கோயிலுக்கு அளித்த நிபந்தங்களை மட்டுமல்ல, அதை எழுப்பிய மேற் சொன்ன, சிற்பிகளின் பெயரையும் விமானத்தில் பொறித்துள்ளான்.



**தஞ்சைப் பெரிய கோயிலுக்கு அளித்த நிவந்தங்களை மட்டுமல்ல. சிற்பிகளின் பெயரையும் விமானத்தில் பொரித்துள்ளான்.**

விமானம் என்பது கருவறைக்கு மேல் அமைந்துள்ள பகுதி என்று, பொதுவாக நாம் நினைக்கிறோம். ஆனால், அடித்தளத்தில் இருந்து மேலே உள்ள கலசம் வரையான பகுதிக்கு விமானம் என்று பெயர். கலசத்தின் கீழ் இருக்கும் பகுதிக்கு, 'சிகரம்' என்று பெயர்.

தென்னிந்தியக் கட்டடக்கலைக்கே தனிப்பெரும் அடையாளமாய் விளங்கும் தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்தில், 'தட்சிண மேரு'வாக கம்பீரமாகக் காட்சியளிக்கிறது விமானம்.

அடுத்து, விசேஷமான காஞ்சி வரதராஜப் பெருமாளின் 'புண்ணியகோடி' விமானத்தைச் சொல்லலாம். பிரம்மனின் யாகத்தை ஏற்று எம்பெருமான் தம்மை வெளிப்படுத்திக் கொண்ட திருத்தலம் இது. ஒன்றன் மேல் ஒன்றாக அமைந்த இரண்டு கட்டுகளைக் கொண்டது இங்குள்ள விமானம். விமானத்தில், கீழே லஷ்மி நரசிம்மனையும், மேல்தளத்தில் பேரருளாளன் என்று கொண்டாடப்படும் வரதராஜனையும் தரிசிக்கலாம். இந்த வரதராஜப் பெருமாளுக்குத்தான் - தான் ஆற்காட்டில் அடைந்த வெற்றிக்காக, மகர கண்டி என்னும் ஆபரணத்தைக் காணிக்கையாக வழங்கினான், ஆங்கிலேயனான ராபர்ட் கிளைவ்.

அஷ்டாக்ஷர விமானத்தை நாம் காண்பது 'திருவாலி'யில். இந்த விமானத்தில் கீழ் எழுந்தருளியிருப்பவன் ஸ்ரீ லஷ்மி நரசிம்மன்.

சீர்காழிக்கு அருகே உள்ளது இந்தத் தலம். வயலாளி மணவாளன் என்பது இங்குள்ள உற்சவரின் திருநாமம். இவர், திருநகரிக்கு வந்து, பிராட்டியை மணம்புரிந்து, திருவாலி திரும்பும் வழியில், திருமங்கை மன்னன் வழிமறித்தார். மணமக்களின் பொருட்கள் அனைத்தையும் தரச் சொன்னார். தம்மிடம் வழிப்பறி செய்ய வந்த அவருக்கு, வைகுந்தம் செல்லும் வழியைக் காட்டினான் வயலாளி மணவாளன். ஆம்; அவருக்கு, தம்முடைய திருமந்திரமான அஷ்டாக்ஷரத்தை உபதேசித்தான். 'அருளொடு பெருநிலமளிக்கும்; நலந்தரும் சொல்லான' அஷ்டாக்ஷரத்தை- அந்த மந்திரத்தை ஜபிப்பதால் அடையப்படுபவனான பகவானே உபதேசித்தான். அப்படியொரு பெரும்பேறு திருமங்கை மன்னனுக்கு மட்டுமே வாய்த்தது.

திருமலை திருப்பதியில் நாம் காண்பது, 'ஆனந்த விமானம்'. அதன்கீழே, அருள்விளக்கமாய் நின்று கொண்டு இருக்கிறான் ஸ்ரீநிவாஸன்.

'பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கைகளில் ஏந்தி...
நல்நிற மேகம் நின்றது போல
செங்கண் நெடியோன் நின்ற வண்ணம்...'

என்று சிலப்பதிகாரம் சிறப்பித்துப் பாடுவது, திருமலை திருப்பதியில் உள்ள ஸ்ரீநிவாசனைத்தான். 'அவனைத் தரிசிப்பதும் ஆனந்தம்; அதைத் தொடர்ந்து வாழ்வில் வருவதெல்லாம் ஆனந்தம்' என்பார்கள். அனைவருக்கும் ஆனந்தம் திருமலை திருப்பதியில் ஆனந்த விமானம் காட்சியளிக்கிறது.

இந்த விமான வகைகளில் தனிச் சிறப்பு வாய்ந்தது, அஷ்டாங்க விமானம். மூன்று நிலைகளைக் கொண்டு விளங்குவது இந்த விமானம். இந்த மூன்று நிலைகளிலும், நின்ற கோலம், இருந்த கோலம், கிடந்த கோலம் என, மூன்று வடிவில் தரிசனம் அருள்வார் பெருமாள். மதுரைக் கூடலழகர், திருக்கோஷ்டியூர், உத்திரமேரூர், சேரன் மாதேவி ஆகிய தலங்களில் இந்த அஷ்டாங்க விமான வடிவைப் பார்க்கலாம்.

விமானம் என்கிற சொல், ஆதி காவியமான ஸ்ரீமத் ராமாயணத்தில், வால்மீகியால் கையாளப்படுகிறது - குபேரனின் புஷ்பக விமானத்தை ராவணன் பறித்துக் கொண்டான் என்று. ஆனால், பறந்து செல்லும் ஒரு வாகனத்துக்கு உரியதான பெயரை, கருவறைமீது அமையும் பகுதிக்கு ஏன் வைத்தார்கள்? வைத்தவர்கள் யாரானாலும், அவர்கள் மகா ஞானிகள்; பெரும் அறிவாளிகள்தான். எப்படி? 'எப்போதும் பறந்து கொண்டேயிருக்க முடியாது; கீழே இறங்கித்தான் ஆக வேண்டும். எனவே, தாங்குவதற்குத் தரை வேண்டும்; தளம் வேண்டும். அதுபோல, எவ்வளவு செல்வம் சேர்த்தாலும், எவ்வளவு பெரிய பதவிகளில் இருந்தாலும் சரி; வாழ்வில் உன்னைத் தாங்குவதற்கான தரையை - தளத்தை, தேடிக் கொள்.' என்று நமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கின்றன விமானங்கள்.

• திருமலை விமானம்





வழங்க விரும்பிய பெருமாள், ஏன் மலைமீது போய் நின்றார்? 'அருவி எப்படி, எந்த பேதமுமில்லாமல் அனைவர்க்குமாக வர்ஷிக்கிறதோ, அதைப் போன்று ஸ்ரீநிவாசப் பெருமாளின் அருளும் அனைவர்க்குமானது; அதில் எந்தப் பேதமும் இல்லை' என்று உணர்த்துவதாகவே,

(அடுத்த வாரம் பிராகாரம்)

**'சிக்குபுக்கு' படத்தின்**
**இயக்குநர் மணிகண்டன்**
**அளித்த படாபட நியூஸ்...**



''எல்லோருடைய வாழ்க்கைப் பயணத்திலும் காதல் வரும். ஒரு பயணமே காதலுக்கு மையப் புள்ளியானால்...? இந்தக் கேள்விக்கு பதில்தான் 'சிக்கு புக்கு'. இப்படத்தில் ரயில் முக்கிய கதாபாத்திரமாக இருக்கிறது. லண்டனில் ஆரம்பித்து காரைக்குடியில் முடிகிறது இந்தத் திரைப் பயணம்.''

''மத்திய லண்டனிலும் கர்நாடகாவின் மடிகேரி மலைக்காடுகளிலும் படமாகியிருக்கும் இந்தப் படத்தில் எஸ்.ராமகிருஷ்ணன் வசனத்தோடு திரைக்கதையிலும் உதவியிருக்கிறார். அவரின் உலகச் சினிமா ஞானத்தையும் தமிழ்ச் சினிமா எல்லையையும் புரிந்து வைத்திருக்கும் யதார்த்தம் எனக்குப் பக்க பலம்.''



# காதலிக்க ஆசை வரும்!

– இயக்குநர் மணிகண்டன்



"நான் கடவுளில் ரௌத்திரமாக வந்த ஆர்யா சிக்குபுக்குவில் சாக்லெட் ஹீரோவாக மாறி யிருக்கிறார். காதலைக் கண்களில் காட்டுவதில் ஸ்ரேயா அபாரம். இந்த ஜோடியைப் பார்த்தால் உங் களுக்கே காதலிக்க ஆசை வந்திடும்."




"கலோனியல் கசின்ஸ் இந்தப் படத் துக்கு இசை. ஒரு சோகப் பாடலுக்கு பஞ்சாப் அமிர்தசரஸில் புகழ்பெற்ற வடாலி பிரதர்ஸ் பாடினால் நன்றாக இருக்கும் என்று திடமாக நம்பினோம். ஆனால் அவர்கள் பஞ்சாப் எல்லையைத் தாண்ட மாட்டார்கள். எனவே, 'சிறப்பானதைத் தேடுவது வெற்றி யின் ரகசியம்' என்பதை உணர்ந்து நாங் கள் அந்த ஒரு பாட்டுக்கு பஞ்சாப் சென்று பதிவுசெய்தோம்."



"நான் அஸிஸ்டெண்ட்டா இருக்கும் போதே ஆர்யா பழக்கம். இப்பவும் நடிகன் என்பதைத் தாண்டி நண்பனாக இருக்கும் ஆர்யா தயாரிப்பு மட்டுமின்றி, விநியோகம் போன்ற பல விஷயங்களில் ஆர்வம் கொள்ளும் அவர் கோலிவுட்டில் ஹீரோக்களிலேயே ஒரு பால்கோவா பாய்!" - ராகவ்குமார்

# வேலையோடு வெளியேறு!

"**எ**ன்னோட படிப்புக்கான செலவை நானே சம்பாதிக்கிறேன். என் பேரண்ட்ஸ் கிட்டே கேட்கிறது கிடையாது. வேலைன்னா வெளியே போய்க் கஷ்டப்படறதில்ல, எங்க ஸ்கூலிலேயே வேலைக்கு டிரெயினிங் கொடுக்கிறாங்க" இந்தக் குரல் பொள்ளாச்சியில் பழனிக் கவுண்டர் மேல்நிலைப் பள்ளி கேட்கிறது.

படிப்புக்கேற்ற வேலையா, வேலைக்கு ஏற்ற படிப்பா என்று மோதிக்கொள்ளும் இன்றைய சூழலில், பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு இருந்தே கல்வியோடு வருமானமும் சம்பாதிக்க வழி செய்திருக்கும் ஒரு பள்ளி, பொள்ளாச்சி பழனி கவுண்டர் மேல்நிலைப்பள்ளி. இதைத் தொடங்கி நடத்திவருபவர் தொழிலதிபர் நா.மகாலிங்கம்.

"+1 படிக்கும் மாணவர்களுக்கு வாரத்தில் மூணு நாள் படிப்பு, மூணு நாள் சம்பளத்துடன் கூடிய வேலைப் பயிற்சியை சாத்தியப்படுத்தி படிக்கும்போதே ஒரு கைத்தொழிலைக் கற்றுக் கொடுப்பதால் +2 முடித்து வெளியேறும்போது வேலைக்கான உத்தரவாதத்துடன், தன்னம்பிக்கையோடு வாழ்வைத் தொடங்கத் தயாராகிறார்கள்" என்ற பெருமிதம் பொங்கச் சொல்கிறார் கரஸ்பாண்டன்ட் சங்கர் வாணவராயர். நா.மகாலிங்கத்தின் பேரன் இவர்.



● சங்கர் வாணவராயர்

"மெக்கேனிக்கல் குரூப் படிக்கும் எங்க ஸ்டூடண்ட்ஸுக்கு +2வில் படிப்புல முழுக் கவனம் இருக்கணும். மதிப்பெண் நிறைய வாங்கணும் என்பதால் தொழிற் பயிற்சியை +1ல் மட்டும் கொடுக்கிறோம். பல தொழிற்சாலைகளுடன் கைகோத்து மாணவர்களை அங்கு அனுப்பி

# கல்வியோடு சம்பாதிக்கவும் வழி செய்துதரும் பள்ளி!

யிற்சி பெற ஏற்பாடு செய்யறோம். அதுல கிடைக்கும் ஊதியத்தை அவர்களின் கல்விச் செலவுக்கே அவங்க பயன்படுத்திக்கிறாங்க'' என்று சொல்லிக்கிட்டு மாணவர்களைச் சந்திக்க நம்முடன் வந்து ஏற்பாடு செய்தார் NIA நிறுவன செயலாளர் கி. ராமசாமி. அங்கிருந்த மாணவர்களுடன் பேசியபோது...

**அருண்கார்த்திக் :** ஸ்ரீராம் டியூப்ஸ் கம்பெனியில டிரெயினிங் எடுத்தேன். என் திறமையைப் பார்த்துட்டு +2 முடிஞ்சதும் எனக்கு அங்கேயே வேலை தருவதாகச் சொல்லியிருக்காங்க.

**க.கார்த்திகேயன் :** இப்போதெல்லாம் சன்டேயில வெளிய வேலைக்குப் போய் சம்பாதிக்கிறேன். ஆட்டோ மெக்கானிக் படிப்பின் தியரியும் பிராக்டிக்கலும் எனக்கு இப்போ அத்துப்படி.

**சீத்தாராம் :** ரூட்ஸ் மல்டி கிளீன் கம்பெனியில் ஸ்டோர் கீப்பரா பயிற்சி எடுத்தேன். படிப்பை முடிச்சதும் இங்கேயே வேலைக்கு வரச் சொல்லிட்டாங்க.

**சௌந்திரராஜன் :** எல்.ஜி. எலக்ட்ரிக் கம்பெனியில் டிரெயினிங் எடுத்த பிறகு படிப்பை முடிச்சதும் என் பிரெண்ட்ஸ் நாலு பேரை சேர்த்துக்கிட்டு நானே சொந்தமா கம்பெனி ஆரம்பிக்க இருக் கிறேன்.

**டோனி பிலிப்ஸ்:** கோவை சிட் கோவிலிருக்கும் இன்டோ ஷெல் காஸ்ட் ஒர்க் ஷாப்ல ஆட்டோ மெக்கானிக்கில் பயிற்சி எடுத்தேன். இப்போ வெளியே வந்தா வங்கியில ரெண்டு மெஷின் கடனா வாங்கி நான் நாலு பேருக்கு வேல தருவேன். அந்த நம்பிக்கை வந்துருச்சு.

**மா**ணவர்கள் தொடர்ந்து நம்பிக்கை யோடு பேசப் பேச வேலை கிடைக்காமல் படித்து வாங்கிய பட்டத்தை நூலில் கட்டி பறக்க விடும் ஒரு பழைய சினிமாவின் சோகக் காட்சி இன்று படுஅபத்தமாகத் தோன்றி மறைகிறது.



**ராஜாஜி கொண்டு வந்து, எதிர்க்கட்சிகளால் தோற்கடிக்கப்பட்ட, தொழிலோடு கூடிய படிப்பு வேறு வகையில் மீண்டும் உண்மையான அக்கறையோடு வெளிக்கிளம்பி இருக்கிறது.**

ராஜாஜி கொண்டு வந்து எதிர்க்கட்சிகளால் தோற் கடிக்கப்பட்ட, தொழி லோடு கூடிய படிப்பு வேறு வகையில் மீண்டும் உண்மையான அக்கறை யோடு வெளிக் கிளம்பி இருக்கிறது. அரசும் இப்போதும் இதை பள்ளிகளில் பரிசீலிக் கத் தொடங்கிவிட்டது என்பது ஆறுதலான செய்தி. மீண்டும் ரீமிக்ஸில் ஒலிக்கத் தொடங்கிவிட்டது... 'கைத்தொழில் ஒன் றைக் கற்றுக்கொள்... கவலை உனக் கில்லை ஒப்புக்கொள்.'

**- ஆர்.பாலா**

# கிரிக்கெட்டில் இனவெறி!

## அம்பலமாகும் கிரிக்கெட் குடுமிப்பிடி சண்டைகள்

**கா**ல்பந்து உலகக்கோப்பை போட்டி நடந்து கொண்டிருக்கிற சமயம் பார்த்து, அதற்கு ஈடான சுவாரஸ்யமும் சூடும் குறைவில்லாத சர்ச்சை ஒன்று கிரிக்கெட்டில் நடந்து கொண்டிருக்கிறது. ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் அனைத்தும் கைகோர்த்து சர்வதேச கிரிக்கெட் வாரியத் துணைத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்ட முன்னாள் ஆஸ்திரேலியப் பிரதமரான ஜான் ஹோவர்ட்டை தோற்கடித்ததுதான் இன்றைய கிரிக்கெட் உலகில் மிகப்பெரிய சர்ச்சையாக உருவாகியிருக்கிறது.


ஹோவர்ட்

விஷயம் இதுதான். சர்வதேச கிரிக்கெட் வாரியத்தின் (ஐசிசி) துணைத் தலைவராக இருந்த சரத் பவாருக்கு இப்போது ஐசிசியின் தலைவராக பதவி உயர்வு கிடைத்துவிட்டது. காலியான துணைத் தலைவர் பதவிக்கு, சுழற்சி வாய்ப்பின் அடிப்படையில் ஆஸ்திரேலியா-நியூசிலாந்து அணிகள் ஒருவரைப் பரிந்துரைக்க வேண்டும். பரிந்துரைக்கப்பட்டவருக்கு வாரியத்தின் பத்து நாடுகளும் மெஜாரிட்டியுடன் ஆதரவுக் கொடுத்துவிட்டால் துணைத் தலைவர் பதவி உறுதி. அவரே இரண்டு வருடம் கழித்து ஐசிசியின் தலைவராகவும் ஆகிவிடுவார். இந்த ஷரத்துபடித்தான் சரத் பவாரும் இப்போது தலைவராகி இருக்கிறார்.

ஹோவர்ட், ஆஸ்திரேலியாவின் பிரதமராக 96 முதல் 2007 வரை பதவி வகித்தவர். 30 வருட அரசியல் அனுபவம் உள்ள ஹோவர்ட், இதற்கு முன்னால் கிரிக்கெட் பதவிகள் எதிலும் பங்கெடுத்தவர் கிடையாது. சிட்னியில் எப்போது கிரிக்கெட் மேட்ச் நடந்தாலும் பார்க்க வந்துவிடுவார். அடிக்கடி கிரிக்கெட் தொடர்பான விழாக்களில் பங்கெடுத்துக் கொள்வார். இப்படிப்பட்ட அரசியல் மற்றும் கிரிக்கெட் பின்புலம் கொண்ட ஹோவர்ட் துணைத் தலைவர் பதவிக்கு பரிந்துரைக்கப்பட்டார்.

ஆனால் பேட்டிகளில் ஹோவர்டுக்கு ஆதரவு தருவது போல பேசிவிட்டு இந்தியா

றைக்குப் பின்னால் வேலை செய்ய ஆரம்பித்தது. ஹோவர்டின் பரிந்துரைப்பில் னக்கும் இஷ்டமில்லை ன்று ஹோவர்ட் எதிர்ப்பு நாடுகளிடம் பேசி ஒரு கூட்டணியை உருவாக்கியது. இதனால் ஆஸி, நியூசிலாந்து, இங்கிலாந்து தவிர ஏழு நாடுகள் ஹோவர்டுக்கு எதிராகக் கிளம்பின. இந்தியா அமைதி காத்தாலும் மற்ற நாடுகளின் பிரதிநிதிகள் ஹோவர்டுக்கு எதிராகத் தொடர்ந்து பேசி வந்தார்கள். ஐசிசியிடமும் தங்கள் எதிர்ப்பைப் பதிவு செய்தார்கள்.



சரத் பவார்

ஹோவர்ட் எதிர்ப்பு நாடுகள் பொதுவாகப் பேசியது இதுதான் - 'அரசியல்வாதி எல்லாம் ஐசிசி பதவிக்கு வேண்டாம். கிரிக்கெட் சூட்சமம் தெரிந்த ஆளாக இருந்தால்தான் நிர்வாகம் செய்ய எளிதாக இருக்கும்'.

அதற்கு ஆஸி, 'சரத் பவார் கூட அரசியல்வாதி தானே, இப்போதும்கூட அவர் மத்திய அமைச்சராக இருக்கிறாரே?' என்றது. பவார், அரசியல்வாதியாக இருந்தாலும் பகுதிநேரமாக விளையாட்டின் முக்கியப் பதவிகளை வகித்தவர். கிரிக்கெட் மட்டுமல்லாமல் மல்யுத்தம், கபடி, கோகோ போன்ற விளையாட்டுகளின் முக்கியப் பதவிகளிலும் தலைவராக இருந்திருக்கிறார். இந்தியக் கிரிக்கெட் கட்டுப்பாட்டு வாரியத்தின் தலைவராக மூன்று ஆண்டுகள் இருந்த அனுபவம் வேறு. இவரைவிடத் தகுதியான ஆள் கிடையாது என்று இந்தியா தெரிவித்தது.

எதிர்ப்பு அலை உருவானதைத் தெரிந்துகொண்ட ஹோவர்ட், சாமர்த்தியமாக ஜிம்பாப்வேவுக்குச் சென்று ஆதரவு திரட்டினார். ஆனால் ஜிம்பாப்வே அவரை வாழ்த்தி அனுப்பிவிட்டு தேர்தலில் அவருக்கு எதிராக வாக்களித்துவிட்டது.

சென்ற வியாழன் அன்று நடந்த தேர்தலில் எதிர்பார்த்தபடியே, ஹோவர்ட் தோற்றுப்போனார். எதிர்பார்த்தபடியே எதிராக ஏழு ஓட்டுகள் பதிவாகியிருந்தன. ஹோவர்ட் ஏன் நிராகரிக்கப்பட்டார் என்பதற்கான காரணங்களை சர்வதேச கிரிக்கெட் வாரியம் சொல்லவில்லை. இதுவரை வாரியப் பதவிக்குப் பரிந்துரைக்கப்பட்ட ஒருவர் நிராகரிக்கப்பட்ட வரலாறு முதல்முறையாக ஹோவர்டுக்கு நடந்திருக்கிறது.

ஹோவர்டை நிராகரித்ததன் மூலமாக கிரிக்கெட்டில் மீண்டும் இனவெறிப் பிரச்னை தலைத்தூக்கியிருப்பதாக கிரிக்கெட் விமர்சகர்கள் கருத்துத் தெரிவிக்கிறார்கள். வெள்ளைக்கார நாடுகளுக்கு எதிராக ஆசிய-ஆப்பிரிக்க நாடுகள் செய்த சதி என்று இன்னொரு விதமாகவும் இந்தப் பிரச்னை விஸ்வரூபம் எடுத்திருக்கிறது. ஹோவர்டை வெளியேற்றியதில் இந்தியாவின் தலையீடு அதிகம் என்று ஆஸ்திரேலிய கிரிக்கெட் நிர்வாகம் நம்புகிறது. இதனால், இதுவரை அனுசரணையாக இருந்து வந்த இந்திய - ஆஸி கிரிக்கெட் வாரியங்களுக்கு மத்தியில் பிளவு ஏற்பட்டுள்ளது. 'அதெல்லாம் ஒன்றுமில்லை. எல்லாமே சுமுகமாக நடக்கிறது' என்ற சரத் பவாரின் பூடகப் பேச்சு ஆஸி கிரிக்கெட் நிர்வாகத்தை மேலும் மேலும் எரிச்சலூட்டி வருகிறதாம்.

**ச.ந.கண்ணன்**

"ஏன் அங்கேயே நின்னுட்டீங்க?" பெரியவர் சவரிநாதன் திரும்பிப் பார்த்து அழைத்தபோதுதான் அவனுக்குத் தன் பலவீனம் சுரீரென உரைத்தது.

ஒரு கையில் ரோஜா மலர்கள் நிறைந்த பை, மறு கையில் மல்லிகைப்பூ மாலை, மெழுகுவர்த்திக் கட்டுக்களுடன் நின்றிருந்தவன், தன் நினைப்பிலிருந்து சற்றே மீண்டவனாய் பெரியவரைப் பின்தொடர்ந்தான்.

மதில்சுவருக்குச் சற்று உள்ளடங்கியதாக இருந்த அந்தப் பிரதான வாசலின் மரக்கதவில் 'கல்லறைத் தோட்டம்' என்று பிரெஞ்சு மொழியிலும், தமிழிலும் புடைப்பு எழுத்துக்களாக அமைந்திருந்தன.

அவன் ஆரம்பக் கல்வி பயின்ற காலத்தில் எப்போதோ ஒருமுறை அதை எழுத்துக் கூட்டிப் படித்திருந்த நினைப்பு மேலிட்டது. அவனது இளம்பிராயத்தில் கிழவிகள் சொன்ன பேய்க்கதைகளில் ஏதாவது ஒரு வகையில் அந்தக் கல்லறைத் தோட்டத்துக்குத் தொடர்பு இருக்கும். அப்போதிருந்து 'கல்லறைத் தோட்டம்' பெயரைக் கேட்டாலே ஒருவித பயம் அவனை ஆட்கொண்டுவிடும்.

சந்தைக்குச் செல்லவென்றால் கல்லறைத் தோட்டம் வழிதான் சுலபமான வழி என்றிருந்தும், இரண்டு தெரு சுற்றிக்கொண்டு போவதையே வழக்கமாக்கிக் கொண்டிருந்தான். மீசை அரும்பிய பின்தான் அவனுக்குக் கல்லறைத் தோட்டம் பற்றிய பயம் கொஞ்சம் தெளிந்தது.

பிரதான வாசலிலிருந்து நீண்ட நடைபாதையில் பெரியவரைத் தொடர்ந்து கொண்டிருந்தான். பாதையின் இருபுறமும் விதவிதமாய் அழகழகான கல்லறைகள், சோகத்தைச் சுமந்திருந்தன.

பளிங்குக் கற்களால் அமைந்திருந்த ஒரு கல்லறையின் முன்பாகப் போய்க் கவலை தோய்ந்த முகத்துடன் அமைதியாக நின்றார் பெரியவர்.

அமைதியாகக் கண்களை மூடி நின்ற பெரியவரின் கன்னங்களில் கண்ணீர் மெல்ல இறங்கியது.



**கொற்றவன்**

பெரியவரையும் கல்லறையையும் மாறி மாறிப் பார்த்தவனுக்கு அவருக்குள் ஏதோ அழுத்தமான சோகம் புதைந்து கிடப்பது புரிந்தது. அவரிடம் டிரைவராக வேலைக்குச் சேர்ந்ததிலிருந்து, கார் ஓட்டியதை விடவும், எடுபிடி வேலைகள் செய்வதுதான் அதிகமாக இருந்தது.

பக்கத்துக் கல்லறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்த ஒரு கிழவி, பாடலொன்றை முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். அது தோத்திரப் பாடலா, ஒப்பாரியா என அவனுக்குப் புரியவில்லை. அதனுள் ஒருவித சோகம் மட்டும் இழையோடியது.

''தம்பீ... என்னால குனிஞ்சு பொறுமையா இப்படிச் செய்ய முடியாது. தயவுசெய்து எனக்காக என் பொண்ணு கல்லறையை அழகுபடுத்தறீங்களா?''

குரல் உடைந்து பணிவுடன் கேட்ட பெரியவரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

''என்னய்யா இப்படிக் கேட்டுட்டீங்க? நான் பண்றேன்ய்யா! நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க!'' உள்ளுக்குள் சற்றுத் தயக்கமிருந்தாலும் சமாளித்துக் கொண்டான். அதுவரை எந்தக் கல்லறைக்கும் சென்று வந்து பழக்கப்படாத அவனுக்கு வித்தியாசமான அனுபவமாக இருந்தது.

கொண்டு வந்திருந்த மலர்களால் அலங்கரித்தான். தலைமாட்டுப் பக்கமாக சிறு கோபுர வடிவ மாடத்துக்குள் ஒரு கல்வெட்டு இருந்தது. அதில் 'ராஜம்மா' என்ற பெயரும் பிறப்பு, இறப்பு நாள் குறிப்பும் கொட்டை எழுத்





# யார் அந்த அழகி?

நுக்களில் இருந்தன. பிறந்த வருடத்தைப் பார்த்ததும் அவனுக்கு வியப்பில் புருவங்கள் உயர்ந்தன. அவனுக்கும் அந்த ராஜம்மாவுக்கும் பிறந்த நாளில் ஒரேயொரு நாள்தான் வித்தியாசப்பட்டிருந்தது.

அந்த ஊரில் இருப்பது ஒரேயொரு அரசாங்க மருத்துவமனைதான். அங்குதான் அவன் பிறந்திருந்தான். ராஜம்மாளும் அங்குதான் பிறந்திருப்பாளென்றால், அந்த மருத்துவமனைக் கட்டடத்தின் ஏதோவொரு அறையில், அவன் சிசுவாய்க் கிடக்கும்போது அவளும் ஒரு தொட்டிலில் கிடந்திருப்பாள். வகுப்புத் தோழி என்பதைப் போல், இவள் பிறப்புத் தோழியாக இருந்திருக்கிறாளே என நினைத்துப் புல்லரித்தான்.

ராஜம்மாளின் இறந்த தேதி கண்ட போது நெஞ்சம் கனத்தான். அவள் தன் பதினெட்டாவது வயதில் இறந்து போயிருந்தாள். அந்த வயதில் அவளுக்கு என்ன நேர்ந்திருக்கும் எனும் கேள்விக்குறி மண்டையைக் குடைந்தது. பெரியவரிடம் அதன் காரணத்தைப் பிறகொரு சமயம் கேட்டு அறிந்திட வேண்டும் என்ற குறுகுறுப்புடன் வேலையில் மும்முரமானான்.

ராஜம்மாள் உயிருடன் இருந்திருந்தால் எப்படி இருப்பாளென்று பெரியவரின் மூத்த மகள்கள் இருவருடன் ஒப்பிட்டான். வெளிநாட்டுக்கு வாழ்க்கைப்படப் போயிருந்த அவர்கள் இருவருமே நல்ல அழகு! பிறந்த ஊருக்கு வந்தபோது, அவர்களைப் பார்த்திருக்கிறான். அவர்களுக்கு எவ்விதத்திலும் குறைவில்லாத அழகுடன்தான் அந்த ராஜம்மாள் இருந்திருப்பாளென்று தோன்றியது.

அவன் எண்ணம் முழுக்க, தன் பிறப்புத் தோழியைச் சுற்றிக் கொண்டிருக்க ''சூரியன் மேற்கில் விழுந்த அந்த அந்திப் பொழுது ரம்மியமாய் நகர்ந்தது.

''இத்தனை வருஷத்திலே இதுபோல அலங்காரத்தை என் மகளுக்கு செஞ்சதே இல்லே தம்பி. ரொம்ப அழகா செஞ்சிருக்கீங்க. நன்றி தம்பி!'' பெரியவர் அந்த வார்த்தைகளைச் சொன்னபோது அவர் கண்கள் துளிர்த்திருந்தது.

''என்னய்யா... இதுக்குப் போயி... நான்...'' அவனுக்கு வார்த்தைகள் தடுமாறியது. அமைதியாகிப் போனான்.

''அன்பானவர்களே...'' திடீரென ஒலிபெருக்கியில் அலறிய அந்தக் குரலுக்கு திடுக்கிட்டுப் போய் குரல் வந்த திசை நோக்கினான்.

அங்கே பாதிரியார் கைகளை விண்ணோக்கி உயர்த்தியபடி நின்றிருந்தார்.

''பிரியமானவர்களே! இந்தக் கல்லறைத் திருவிழாவில் உங்கள் மூத்த தலைமுறைக்கும், பரலோகம் சேர்ந்தவர்களுக்கும் நீங்கள் காட்டும் அன்பும் ஆராதனைகளும் கண்டு அளவிலா மகிழ்ச்சி அடைகிறேன். இன்று நாம் செய்யும் இந்தத் திருப்பலி மூலம் அவர்களின் ஆத்துமா

''மன்னரைப் பாடிய புலவருக்கு ஏன் நூறு கசையடி?!''

''பின்னோடிகளுக்கெல்லாம் முன்னோடியான மன்னா! என்று பாடினால் கோபம் வராதா?''

- கோமதி நடராஜன்



நிம்மதி பெறட்டும்! தேவனின் இராச்சியம்..." தொடர்ந்து பாதிரியாரின் குரலைக் கூட்டம் செவிமடுக்கத் தொடங்கியது.

மயான அமைதி என்ற சொல் மட்டுமே பழக்கமாகியிருந்த அவனுக்கு, அத்துணை பேர்களுடன் அடர்ந்திருந்த அந்த மயான பூமியின் அமைதி புதுமையாக இருந்தது.

தென்கிழக்குப் பகுதியின் மூலையில் தனியாய்ப் பெருத்து வளர்ந்திருந்த தடித்த அந்த ஒற்றைத் தேக்கு மரத்தில் பார்வையைச் சற்று நிறுத்திய போது, பகீரென அதிர்ந்தான்.

> இதழ்குவித்து அவனை நோக்கி முத்தம் ஒன்றைக் காற்றில் ஊதிவிட்டுக் கையசைத்தாள்.

பளீரென்ற வெள்ளுடையில் பருவப் பெண்ணாய் அவள் தன்னந்தனியாய் நின்றிருந்தாள். காட்சிக்கு வைத்த மெழுகுச் சிலையொன்றை வார்த்திருக்கும் அழகுடன் இருந்த அவள், அவனைத் தான் பார்த்துக் கொண்டிருந்தாள்.



அவனுக்கு இது அதிர்வாக இருந்தது. கூட்டம் கண்களை மூடியபடி பாதிரியாருடன் கூட்டு வழிபாட்டிலிருக்க, தான் மட்டும் திருதிருவென விழித்துக் கொண்டு கூட்டத்தினரை வேடிக்கைப் பார்ப்பதால்தான் தன்னைப் பார்க்கிறாளோ என்ற சிந்தனையுடன் சில விநாடிகள் கழித்து மெல்லத் திரும்பினான்.

அப்போதும் அவள் பார்வை தன்மீதே நிலைகுத்தியிருப்பதில் ஆச்சரியமானான். இதயம் தடதடக்க ஆரம்பித்தது.

அவனையே பார்த்துக் கொண்டிருந்தவள் மெல்ல தலைசாய்த்துப் புன்னகைத்தாள்!

அப்போதுதான் அந்த அழகுப் பதுமையின் தனிமையைக் கவனித்தான். அங்கு குழுமியிருந்தவர்கள் யாருடனும் வந்திருப்பவளாகத் தெரியவில்லை. ஏன் அவ்வளவு இடைவெளியில் தனித்து நிற்கிறாள் என்ற கேள்வி அவனுக்குள் கிளம்பியது.

அவள் எதையோ சொல்ல வருவது போலிருந்தது. சிரித்தமுகமாக நின்றிருந்தவள் ஏதோ முணுமுணுத்தாள். இதழ் குவித்து அவனை நோக்கி முத்தம் ஒன்றைக் காற்றில் ஊதிவிட்டுக் கையசைத்தாள். மெய்சிலிர்க்க அவன் தன்னை மறந்து கண்களை மூடிய போது அந்தரத்தில் பறப்பது போன்ற உணர்வில் கிறுகிறுத்துப் போனான்.

"ஆமென்..!"

கண்களை மூடியிருந்த கூட்டம் சொன்ன அந்த ஒற்றை வார்த்தை கல்லறைத் தோட்டத்து சுவர்களில் எதிரொலித்து அதிர்ந்தது. திடுக்கிட்டுக் கண் விழித்துத் திரும்பினான்.

வழிபாட்டை முடித்த கூட்டம் அதுவரை அடைகாத்திருந்த அமைதியை உடைத்து சலசலத்தபடி கலையத் தொடங்கியது.

அவன் அவசரமாய் தேக்கு மர மூலையை நோக்கினான். மரத்தில் பறவையினங்கள் படபடத்தன. கூட்டம் கலைய ஆரம்பித்ததில் அவளைச் சரிவரப் பார்க்க முடியாமல் தடுமாறியவனைப் பெரியவர் குரல் மீட்டது.

"போகலாமா தம்பி!" கல்லறையில் ஏற்றி வைத்த மெழுகுவத்திகள் கரைந்து உருகி வழிந்தோடி கடந்துபோன நேரத்

தைக் காட்டியது.

எப்படியும் தன்னைத் தாண்டித்தான் அவள் கல்லறைத் தோட்டத்துப் பிரதான வாசலுக்குப் போக வேண்டும். அப்போது அவளை அருகில் பார்க்க முடியும் என்ற நினைப்புடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு பெரியவருடன் நகரத் தொடங்கினான்.

பிரதான வாசலை அடைந்தபோது, பெரியவரைத் தவற விட்டிருந்தான். அருகிலிருந்த ஒரு சிறிய கருங்கல் மேடையில் ஏறி நின்று பார்த்ததில், கல்லறைத் தோட்டத்து அந்த ஒற்றைத் தேக்கு மர மூலை தெரிந்தது! ஆனால் அவளை அங்கு காணவில்லை!

தேக்குமர மூலையிலிருந்து அவள் வாசலை வந்தடைய நேரம் சில நிமிடங்கள் பிடிக்கும். அதற்குள் பெரியவர் புறப்படாமல் இருக்க வேண்டுமே என்ற பரிதவிப்பு மேலிட்டது.

"தம்பி" யாரோ ஒருவருடன் நின்றிருந்த பெரியவர்... "செத்தநாழி பேசிட்டு வந்திடறேன்" எனக் குரல் கொடுத்தார். சூழல் கைகொடுத்ததில் சந்தோஷமானான்.

வாசலைக் கடந்தவர்களில் அவள் முகத்தைத் தீவிரமாகத் தேடினான். கூட்டம், நிமிடங்கள் கரையக் கரைய வேகமாய்க் குறையத் தொடங்கியது.

ஒருக்கால் தன் பார்வையில் படாமல் போய்விட்டாளோ என்ற சந்தேகமும் சின்னதாய் அவனுக்குள் எழுந்தது. வாசலில் காத்துக் கிடக்கும் தன்னை அலைகழிக்க, வேண்டுமென்றே கடைசி ஆளாய் வரத் திட்டமிட்டிருக்கிறாளென நினைத்து சமாதானமாகிக் கொண்டு தேக்கு மர மூலையைப் பார்த்தான். அங்கே அப்போது முற்றிலும் இருள் சூழ்ந்திருந்தது.

வெகு சொற்பமாய் வெளியேறிக் கொண்டிருந்தவர்களில் கடைசி ஆளாய் அந்தக் கிழவி வந்தாள். இடுங்கிய கண்களுடன் அவனையே பார்த்துக் கொண்டு கடந்து போனாள்.

"டாக்டர் பட்டம் வாங்கின நமது தலைவர் ஏன் பயப்படுகிறார்?"

"போலி டாக்டர்களையெல்லாம் கைது பண்றாங்களே, நம்மையும் பண்ணிடுவாங்களோன்னுதான்."

-வி.ஜி.சத்தியநாராயணன்



தன் காத்திருத்தல் அர்த்தமற்றுப் போய் விட்டதில் வருத்தம் வாட்டியது.

காவலாளி கல்லறைத் தோட்டக் கதவை இழுத்து மூடினான்.

"போகலாமா தம்பி!" அவனை எதிர்கொண்டு வந்த பெரியவர் கேட்டார்.

"சரிங்கய்யா...!" அவசரமாய்த் தலையாட்டி விட்டு, அவரைப் பின் தொடர்ந்தான்.

அந்த அழகியின் முகமே மனத்தில் திரும்பத் திரும்ப வந்து கிளுகிளுப்பூட்டியது. இளம்பிராயத்திலிருந்து இத்தனை நாளும் கல்லறைத் தோட்டம் தனக்குள் கிலி ஏற்படுத்திக் கொண்டிருந்ததை நினைத்துச் சிரித்துக் கொண்டான்.

"கிக்கிக்கிக்கீ..." என இருளைக் கிழித்துக் கொண்டு ஒரு கிளி அவனது சிரிப்புக்குப் பதிலளிக்கும் விதமாக விர்ரென அவன் தலையைத் தட்டிச் செல்வது போல வெகு சமீபமாய் கடந்து சென்றது. ●

# ஸ்கூட்டி வந்த நேரம்!



"சீதனமாக அப்பா எனக்கு வாங்கி கொடுத்த ஸ்கூட்டி இது. சைக்கிள் ஓட்டத் தெரியாத நான் நேரா ஸ்கூட்டி ஓட்டக் கத்துக்கிட்டேன். இதற்கு முன்னே எங்கே வெளிய போகனும்னாலும் வீட்டுக்காரர் ஹெல்ப் கேட்கனும். இப்போ நான் அவருக்கு லிப்ட் கொடுக்கிறதுதான் ஹைலைட். ஒருமுறை அப்பாவுக்கு சுகர் பிரச்னை. மயக்கமாகி வர்ற வழியில் உட்கார்ந்துட்டு போன் பண்ணாரு. நான்தான் அவர் வாங்கிக் கொடுத்த வண்டியில அவரை அழைச்சுக்கிட்டு வந்தேன்.''

- கவிதா கோபாலகிருஷ்ணன்



"என் ஸ்கூட்டிய போல ஒரு ஸ்வீட்டான, க்யூட்டான, ப்யூட்டிய நீங்க பார்த்திருக்கவே முடியாது. அது என்னமோ தெரியல, என்ன மாயமோ புரியல... ஸ்கூட்டி வந்ததுலேர்ந்தே என் லைஃபே ரொம்ப குப்பரா போய்கிட்டு இருக்கு. ஸ்கூட்டில போற சுகத்துக்காகவே அம்மாவ காய் வாங்க, பழம் வாங்க ''ஸ்கூட்டில வாங்க''ன்னு சொல்லி நான் கூட்டிகிட்டு போவேன். ஒரு விபத்துல என் கை கால்ல கீறல் விழுந்ததை பத்தி கூட நான் கவலை படல... என் ஸ்கூட்டிக்கு ஆபத்தான்னுதான் பார்த்தேன்.''

- அர்ச்சனா

## வாசகர்களே!

உங்க பைக் அனுபவத்தை 'மை பைக்' என்று குறிப்பிட்டு எழுதி அனுப்புங்க. kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

## கமிஷன் தகராறில் வெட்டிக்கொள்ளும் மாணவர்கள்!



# காவு வாங்கும் கல்வி

"என்னிக்கோ ஒரு நாள் நடக்கணும்னு இருந்துச்சி. இப்போ நடந்துடுச்சி. இது எல்லாருக்கும் தெரிஞ்ச விஷயம்தான் சார்," என்று தமது பெயரைச் சொல்ல விரும்பாத ஒரு பேராசிரியர் பேசத் தொடங்கினார்.

கடந்த ஒரு வாரத்தில், நிர்பே சிங் கொலை செய்யப்பட்டதுதான் எஞ்சினியரிங்க கல்லூரிகளில் முக்கியச் செய்தி. வடமாநில மாணவர்களை எஞ்சினியரிங் படிப்புகளில் சேர்த்துவிடுவதில் ஏற்பட்ட கமிஷன் தகராறு, கொலையில் போய் முடிந்திருக்கிறது.

சீனியர் மாணவர்கள், கமிஷன் ஏஜெண்டு களாக மாறி பல ஆண்டுகள் ஆகிவிட்டன. அதுவும் உயர்கல்வி வசதி அதிகம் இல்லாத ஜார்க்கண்ட், ஒரிசா, வடகிழக்கு மாநிலங் களிலிருந்து வரும் மாணவர்களைச் சென்னையை ஒட்டிய நிகர்நிலைப் பல்கலைக் கழகங்களில் சேர்த்துவிடுவது ஒரு லாபகர மான தொழில்.

"ஃபாரின் ஸ்டுடண்ட்ஸ் அட்மிஷனிலும் இதேதான் நடக்குது," என்று தொடர்ந்த பேராசிரியர், "அட்மிஷன்ல இருக்கும் சிக்கல் களே இதுக்குக் காரணம். என்ன சர்ட்டிபிகேட் வைக்கணும், என்ன அட்டெஸ்டேஷன்ஸ் வாங்கணும் எல்லாம் சீனியர்களுக்குத் தெரியும். அவங்க எல்லாத்தையும் பார்த்துப் பாங்க, புது பசங்க, அவங்க கால்ல போய் விழுறாங்க," என்றார்.

பெற்றோர்கள் பெட்டி படுக்கையோடு மூட்டைக் கட்டிக்கொண்டு சென்னை வந்து அட்மிஷனுக்காகத் தவம் இருக்க விரும்புவதில்லை. யாரேனும் ஏஜெண்ட் இருந்தால், உடனே வேலை முடிந்துவிடுமே என்று நினைப்பவர்களே அதிகம். பல ஊர்களில் இதுபோன்ற அட்மிஷன் ஏஜெண்டுகள், எஜுகேஷன் கன்சல்டன்சிகள் வைத்து நடத்துகிறார்கள்.

இப்படிப்பட்ட ஏஜெண்டுகளிடம் போவதைவிட சென்னையிலேயே படிக்கும் உள்ளூர்ப் பையனிடம் போவது பல பெற்றோர்களுக்கு வசதியாக இருக்கிறது. ஏஜெண்டுகளை விட மாணவர்கள் அடிக்கும் கமிஷன் குறைவு என்பது இன்னொரு காரணம். மேலும் சீனியர்களாக இருப்பதால், ஒருவித பாதுகாப்பும் கிடைக்கும் என்ற அல்ப நம்பிக்கையும் இதில் உண்டு.

கல்லூரிகளும் நிகர்நிலைப் பல்கலைக்

கழகங்களும் தங்களுக்கு நல்ல ரேட்டில் அட்மிஷன் முடிந்தால் போதும் என்று இதுபோன்ற மாணவ ஏஜெண்டுகளைக் கண்டும் காணாமல் இருந்து விடுகிறார்கள். இந்த மாணவ ஏஜெண்டுகளிடையே குழுக் கள் உருவாகி, பகையுணர்வு மிக, அதுதான் திர்பே சிங் கொலையில் கொண்டு வந்து விட்டிருக்கிறது. எஞ்ஜினியரிங் மட்டுமல்லா மல் பிற உயர் படிப்புகளிலும் அட்மிஷன் ஏஜெண்டுகள் தலை நுழைத்திருக்கிறார்கள்.

அட்மிஷன்களில் மாணவ ஏஜெண்டுகள் சம்பாதிக்கும் தொகைதான் கண்ணைக் கட்டு கிறது. ஒவ்வொரு அட்மிஷனுக்கும் தேர்ந் தெடுக்கப்படும் எஞ்ஜினியரிங் சப்ஜெக்ட் டைப் பொறுத்து, கேப்பிடேஷன் ஃபீஸ் மாறுபடுகிறது. அதேபோல், ஏஜெண்டுகளின் கமிஷனும். ஒரு அட்மிஷன் சீசனில், பல லகரங்களைப் பார்க்கும் சீனியர் மாணவர் குழுக்களும் இருக்கின்றன.

''வெளி மாநில பசங்களுடைய அட்

# வியாபாரம்!

மிஷனை இன்னும் ஸ்ட்ரிக்ட் ஆக்கணும். பல சமயங்களில் அவங்களோட பேக்கிர வுண்ட் என்னன்னே தெரியமாட்டேங்குது. கோர்ஸுல சேர்ந்த பசங்க ஒருசிலர் கிளா ஸுக்கே வரமாட்டாங்க. எங்கே இருக்கான், என்ன செய்யறான், படிக்கத்தான் வந்தானா, இல்லை வேற ஏதாவது தொழில் செய்யறா னான்னு தெரியலை'' என்று குபீர் சந்தேகத் தையும் கிளப்பினார் ஒரு கல்லூரியின் நிர்வாகத்தைச் சேர்ந்தவர்.

புதுசு புதுசாய்க் கல்லூரிகள் தொடங்க அனுமதி கொடுப்பது முக்கியமில்லை. அங்கே ஒழுங்காக அட்மிஷன் நடக்கிறதா என்று கவனிப்பதும் முக்கியம். அது மைன ஸாக இருப்பதால்தான் கல்லூரிகள் ஆயுதக் கூடங்களாகவே மாறிவருகின்றன.

- ஞானம்

## பிரச்னை கல்வி நிறுவனங்களிடமே!

**முனைவர் க. திருவாசகம், சென்னைப் பல்கலைக்கழகம்**

பிரச்னை கல்வி நிறுவனங்களிடமே இருக்கிறது. அவர்கள் தங்கள் அட்மிஷ னுக்காக இதுபோன்ற தவறுகளுக்கு இடம் கொடுப்பதாலேயே இப்படியெல்லாம் நடக்கிறது. அரசு இதற்கென்று தனியாக சட்டமே கொண்டு வரவேண்டும்.

பல சீன மாணவர்கள் இங்கே இங் கிலீஷ் படிக்க வருகிறார்கள். அவர்கள் படித்து மீண்டும் சீனாவுக்கே திரும்பு வார்கள் என்று பார்த்தால், அதுதான் நடக்க மாட்டேன் என்கிறது. இங்கேயே தங்கி விடுகிறார்கள். சொல்லப் போனால் பல மாணவர்கள் விசா நீட்டிப்பு இல்லாமல் தங்கி விடுகிறார்கள். தங்கள் நாட்டுக்கே திரும்புவதில்லை. இங்கே உட்கார்ந்து கொண்டு இதுபோன்ற தேவையற்ற பிரச்னை களில் ஈடுபடுகிறார்கள்.



சென்னைப் பல்கலைக்கழகத்தில் இதுவரை இதுபோன்ற எந்தப் பிரச்னை யும் இல்லை. நாங்கள் எங்கள் வெப்சைட் டிலே தெளிவாகப் போட்டுவிட்டோம். வெளிநாட்டு, வெளிமாநில மாணவர்கள், தங்கள் அட்மிஷனுக்காக நேரடியாக எங்கள் பதிவாளரை அணுகினாலே போதும். மூன்றாம் மனிதரின் தலையீடு கூடவே கூடாது.

அப்படி யாராவது தலையிடுவதாகத் தெரியவருமானால், அவர்களை போலீ ஸில் பிடித்துக் கொடுத்துவிடுவோம்.

**அ.**இ.அ.தி.மு.க. இலக்கிய அணித் தலைவர் பழ.கருப்பையா தாக்கப்பட்ட சம்பவம் வேதனைக்குரியதென் பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. என்றபோதிலும், சபைக்குதவாத வார்த்தைகளால் அவர் முதல்வர் கலைஞரை சாடியதையும், ரபி பெர்னார்டு ரசித்துக் கேட்டதையும் ஜெயா டி.வி.யில் பார்த்தேன். இறுதியில், ''மானங்கெட்டவனே - உனக்குத் தமிழ் மாநாடு ஒரு கேடா?'' என்று கூறி முடித்தார். ஒரு பெரும் கட்சியின் தலைவருக்கு இது அழகல்லவே?

**- தார்சி எஸ்.பெர்னாண்டோ, சென்னை-92**

**''ரொ**ம்ப சிம்பிளாக வாழ வேண்டும் என்று முதலில் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்' என்ற காஞ்சி பெரியவரின் அருள்வாக்கு அருமை. **-கே.வி.ராமன், சேலையூர்**

**தொ**டர் முழுவதும் செம கலாட்டாவாக இருக்கப் போகிறது என்பதை முதல் அத்தியாயமே உறுதி செய்து விட்டது. அதாங்க,

# கொஞ்சங்கூட நன்னாயில்ல ஓய்!

ஊர்வசியின் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!'

**-என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**அ**ந்தக் காலத்தில் கல்கியின் எழுத்துக்கள் கருத்தோடு சிரிக்கவும், சிந்திக்கவும் வைத்துக் கொண்டிருந்தது. அதே போல இப்போதும் இருக்க வேண்டுமென்ற கல்கியின் முயற்சியில் கிரேஸியோடு ஊர்வசியும் பட்டாசு வெடிக்கத் தொடங்கிவிட்டார்; இனி ஜாலிதான்.

**- இரா.கல்யாணசுந்தரம், அனுப்பானடி**



**'க**ண்டறியாதன கண்டேன்' பகுதியில் ஆலய அங்கங்களின் வரிசையில் 'மண்டபங்கள்' பற்றிப் படித்தபோது, ஆலயங்களில் ஆண்டவன் வீற்றிருக்கும் கருவறை மட்டுமல்ல...ஆலயத்தின் ஒவ்வொரு அங்கமும் 'அவன் பதம் தொழவே...' என்றுணர்ந்து மெய்சிலிர்த்தேன். அடுத்த

# வட்டமேஜை

வாரம் விமானத்தின் சிறப்பைப் படிக்க இப்பொழுதே காத்திருக்கிறேன்!

- ஆர்.அருணாஸ்ரீ, சின்னகாஞ்சிபுரம்.

**த**னியார் வாகனங்களில் ஒன்றிலக்க எண்கள் கொண்டவைகளை ஒன்றிலக்கத் தேதிகளிலும், இரட்டைப் படை எண்கள் கொண்ட வாகனங்களை இரட்டைப் படை தேதிகளிலும் மட்டும்தான் உபயோகப்படுத்தும்படி அரசு ஆணை பிறப்பித்தால், போக்குவரத்து 40 சதவிகிதம் கட்டாயமாகக் குறையும். சீனா இதைச் செயல்படுத்தி விட்டது.

-வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்

11.7.2010 இதழில் அராஜக அரசியலை சுட்டிக்காட்டிய தலையங்கமும், கருத்துப்படமும் சிறப்பாக இருந்தன.

-இரா.மாரிமுத்து, இலால்குடி

**உ**லகம் முழுவதும் கால்பந்தாட்டப் பிடியில் சிக்கியிருக்கும் தருணத்தில் பல்வேறு பிரச்னைகளில் பொதுமக்கள் பந்தாடப்படுவதை சித்தரித்த உமது கார்ட்டூன் 'சமயோசிதப் பேர்வழி கல்கி' என சொல்லத் தூண்டியது.

-சி.மகேஷ், திருச்சி

**தி**ருமாவளவனின் 'மனப்பட்சி' ஒவ்வொரு மனிதனின் மனசாட்சி! யதார்த்த மனத்தின் உச்சம்; ஒவ்வொரு மனிதனின் எச்சம்! வாழ்க்கையைத் தொலைக்காதே வாழ்ந்து பார் வாழ்க்கையை...!

-இராம.வேதநாயகம், வடமாதிமங்கலம்.

**இ**டும்பன் காட்டேரியும் இருளச்சியும் பிராமணாள் பாஷை பேசிண்டு புலி, சிங்கம், யானை முதல் நரமாமிசம் வரை வரதட்சிணை கேக்கறது கொஞ்சங் கூட நன்னாயில்ல ஓய்! கோழி முட்டை, கோழி, ஆடு, பல்லி, பூரான், கரப்பான், பட்டாம்பூச்சி, ஈசல் போன்ற சுத்த சைவ உணவுகளை கேட்டிருக்கலாம் ஓய்!

- மீனாகண்ணன், கோட்டையூர்

## பரிசுக்கடிதம்!

கிழக்குப் பதிப்பகம் வழங்கும் ரூ.250 மதிப்புள்ள நூல்கள் பரிசு பெறும் கடிதம்:

**வ**ற்ற தண்ணியை முறையா பத்திரப்படுத்தி, பாசனம் பண்ண முடியாம இருக்கையில, ''நீ தண்ணி குடு. நீ நீர் குடுன்னு'' அடுத்தவன்ட்ட மல்லாடுறது மரியாதையில்லீங்க...

விருப்பு, வெறுப்பு இல்லாம, ''காணாமல் போன கால்வாய்களை''க் கண்டுபிடிச்சு, தூர்வாரி, புனரமைத்து, ஸ்தம்பிக்க இருக்கும் விவசாயத்தைச் செழிக்கச் செய்ய, உடனடி நடவடிக்கை எடுக்க, சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு வேண்டுகோள் வைப்பதுதான் முதல் தேவை!

-என்.கோமதி, நெல்லை-7

**பொ**ருளடக்கத்தில் 'வாசகர் ஏரியா'வில் 'வட்ட மேஜை'யை சேர்க்காமல் விட்டு விட்டால், அது வாசகர் ஏரியாவாக இல்லாமல் போய்விடுமா என்ன?

-கவிஞர் அய்யாறு வாசுதேவன், சென்னை-91

**ந**தியாவின் யதார்த்தமான பதில்கள் அடுத்த வீட்டுப் பெண்ணுடன் உரையாடும் சம இயல்பை வெளிப்படுத்தியது. நன்று. குடும்ப அக்கறையுடன் பேசிய அவரின் மனோபாவம் பாராட்டுக்குரியது.

-பா.ராம்பிரசாத், சென்னை-43

எம்.பிக்களுக்கு சம்பளம் மாதம் 80,001 ரூபாயாக உயர்த்த வேண்டுமென கோரிக்கை எழுந்திருக்கிறது. ஏற்கெனவே பொதுச் சேவையில் இருப்பவர்களைப் பற்றி மக்களின் மதிப்பீடு, மிகவும் குறைந்து வரும் நிலையில், "எதற்காக இவர்களுக்கு இத்தனை சம்பளம்?" என்று முணுமுணுப்பு கேட்கிறது. அந்த முணுமுணுப்பை அப்படியே மூன்று எம்.பிக்களிடம் எதிரொலித்தோம்...

**கே.எஸ்.அழகிரி** *(காங்கிரஸ்):*

எல்லோரையும் ஒரே பார்வை கொண்டு பார்க்கக்கூடாது. தொகுதியி லும் தில்லியிலும் அலுவலகங்கள், பணியாளர்கள், போக்குவரத்துச் செலவு என்று விலைவாசி எங்களையும் பாதித் திருக்கிறது. பெரிய பணக்காரர்கள், தொழிலதிபர்கள் எம்.பிக்களாக இருக் கிறார்கள். அவர்களுக்கு வேண்டுமானால் சம்பளம் கூடுதலாகத் தேவைப்படாமல் இருக்கலாம். ஆனால், மனச்சாட்சியுடன் சொல்கிறேன். லஞ்சம், ஊழல் என்ற காற்றே படாத பொது வாழ்க்கையில் இருக்கும் என்னைப் போன்றோருக்குச் சம்பள உயர்வு கட்டாயம் தேவை. வேண்டுமானால் கொஞ்சம் சிக்கனம் காட்டலாம். உதாரணமாக விமானத்தில் பிஸினஸ் வகுப்புக்குப் பதிலாக எகானமி வகுப்பு கொடுக்கலாம். இதன் மூலம் சென்னை-தில்லி பயணத்தில் 30,000 ரூபாய் கூட குறையும்.

**டி.கே.ரங்கராஜன்** *(மார்க்ஸிஸ்ட் கம் யூனிஸ்ட்) :*

இந்த உயர்வு கண்டிப்பாகத் தேவை. ஆனால், உறுப்பினர்களே கூடி தீர்மானம் போட்டுத் தங்களது சம்பளத்தை உயர்த்து வதை வன்மையாகக் கண்டிக்கிறோம். அதற்குப் பதிலாக அரசு ஊழியர்களுக்கு நியமிக்கப்படும் சம்பளக் கமிஷன் எங் களுக்கும் சம்பளம் நிர்ணயம் செய்யலாம்.

• கே.எஸ்.அழகிரி

# இந்தச் இன்னும்

## எம்.பிக்கள் எஞ்சாய்மென்ட்?

# சம்பளம் போதுமா? கொஞ்சம் வேணுமா?


★ எஸ்.செல்வக்குமார்

மக்கள் பிரதிநிதிகளின் சுயகௌரவம், பாராளுமன்றத்தின் மாண்பு ஆகியவைகளை கணக்கில் கொண்டு பார்க்கும் போது எம்.பிக்களின் சம்பளம், கேபினட் செயலாளரின் சம்பளத்தை விட ஒரு ரூபாயாவது அதிகமாக இருக்க வேண்டும்.

ஏனென்றால், சட்டம் இயற்றியவர்கள் நாங்கள். அதை அமுல்படுத்தும் அதிகாரிக்கு எங்களை விடச் சம்பளம் குறைவாக இருப்பதுதான் மக்களுக்குச் செய்யும் மரியாதை. ஆனால் சம்பளத்தில் கணிசமான பகுதியைக் கட்சிக்குக் கொடுத்துவிட்டு எளிய வாழ்க்கை வாழும் எங்களுக்கு இதுபற்றிய பெரிய எதிர்பார்ப்பு கிடையாது.

★ திருமாவளவன்

**திருமாவளவன்** (விடுதலைச் சிறுத்தை)

பெரிய தொகுதியாக இருப்பதால் இரண்டு அலுவலகங்கள், போக்குவரத்துச் செலவு, அலுவலக வாடகை என்று பார்க்கும் போது குடும்பச் சுமை இல்லாத ஒற்றை நபரான என்னாலேயே செலவைத் தாங்க முடியவில்லை. எங்கள் தேவைகளை அரசு கவனித்துக் கொண்டால், பலருக்குத் தவறான முறையில் சம்பாதிக்கும் எண்ணம் எழாமலே போகும். மக்கள் எங்கள் எல்லோரையும் ஒரே அளவுகோல் கொண்டு பார்க்கக்கூடாது. கண்டிப்பாக இந்த உயர்வு தேவை.

## தற்போதைய சம்பள விபரங்கள்!

- சம்பளம் - 16,000 ரூபாய்
- பாராளுமன்றம் நடக்கும் போது தினப்படி - 1000 ரூபாய்
- அலுவலகச் செலவு - 14,000 ரூபாய்
- தொகுதி படி (மாதம்) - 10,000
- வருடத்துக்கு 36 முறை விமானத்தில் பிஸினஸ் வகுப்பில் பயணச் சலுகை
- ரயிலில் முதல் வகுப்பு ஏ.ஸி. இலவசம் (உதவியாளருக்கும் உண்டு) தில்லியில் டாக்ஸி கட்டணம் (ஒருமுறைக்கு) 120 ரூபாய்
- வருடத்துக்கு 4000 கிலோ லிட்டர் குடிநீர், 50,000 யூனிட் மின்சாரம் இலவசம்
- தில்லியில் வாடகையில்லாத வீடு
- தொகுதியிலும், தில்லியிலும் 50,000 லோக்கல் கால் லேண்ட் லைனில் இலவசம்
- தில்லி தொகுதியிலிருந்து 1000 கி.மீ.க்கு மேல் இருந்தால் இன்னும் 20,000 கால் இலவசம்
- செல்போன் இலவசம்; அத்தோடு போனஸாக 1,70,000 கால்கள் இலவசம்.
- இலவச மருத்துவச் சிகிச்சை
- கார் வாங்க உதவித் தொகை
- பதவி போனாலும், 3000 ரூபாய் பென்ஷன் உண்டு

**(இப்போதைக்கு இவ்வளவுதான்)**

**எம்.**பிக்களின் இந்தக் கருத்துக்களைப் பற்றி, இளைஞர் விழிப்புணர்வு இயக்கத்தின் தலைவர் எஸ்.செல்வக்குமார் சொல்கிறார்:

''பொதுச் சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தோடு அரசியலுக்கு வருபவர்களின் எண்ணிக்கை மிகக் குறைந்து விட்டது. இந்த நிலையில் எம்.பிக்களைப் பற்றிய பொது மக்களின் பார்வை மோசமாகத்தான் இருக்கும். சென்னையில் உள்ள கவுன்ஸிலர் ஒருவருக்கு அன்றாட லஞ்ச வருமானம் ஐந்து லட்சம் என்றால் நம்புவீர்களா? எனவே எம்.பிக்களின் மறைமுக வருமானம் பற்றி பொதுமக்களுக்கு நன்றாகவே தெரிந்திருக்கிறது. 'எவ்வளவு வேண்டுமானாலும் சம்பளத்தை உயர்த்திக் கொள்ளட்டும்; ஆனால் மனசாட்சியுடன், கறைபடாத கரங்களோடு மக்கள் சேவையில் ஈடுபடட்டும். அதற்கு வழியைக் காணோமே!''



**கேபினட் செயலாளரின் சம்பளத்தைவிட ஒரு ரூபாயாவது அதிகமாக இருக்க வேண்டும்.**

* டி.கே.ரங்கராஜன்

\- ப்ரியன்

லெ.நா.சிவக்குமார்

"காத்தாடியோட வால் ஸ்டெதஸ்கோப் மாதிரி இருக்கே?"

"டாக்டர் பட்டம் போலிருக்கு!"









# மார்பிள் கிருஷ்ணன்!

இங்கிலாந்தின் பெருமைகளுக்குள் இப்போது ஸ்ரீசுவாமி நாராயண் மந்திருக்கும் ஓர் இடம் உண்டு. லண்டனில் வடமேற்கு பகுதியான வெம்ப்லியில் (Wembly) நீஸ்டன் என்ற இடத்தில் சுமார் 3.85 ஏக்கர் பரப்பளவில் வீற்றிருக்கிறார் பெருமாள். வெள்ளை கோயில், மார்பிள் கோயில், பாப்ஸ் கோயில் என இதற்கு பல புனைப்பெயர்களும் உண்டு.

முதல் பார்வைக்கு ராஜாக்களின் அரண்மனை போல கம்பீரமாகவும் சுற்றிலும் பசுமையான தோட்டத்துடன் அழகான நந்தவனம் போலிருக்கும் கோயிலின் முகப்பே மனதுக்கு பேரானந்தம் தரும்.

அதே அளவுக்கு பாதுகாப்பு கெடுபிடிகளும் உண்டு. எந்த வித லக்கேஜும் இல்லாமல்தான் உள்ளே செல்ல முடியும். பிரம்மாண்ட கேட் அருகே காவலுக்கு இருக்கும் செக்யூரிட்டிகள்





நம்மை சோதனை செய்துதான் அனுப்பு கிறார்கள்.

யோகஜி மகராஜ் என்ற சாமியார் 1970-ல் இங்கிலாந்து வரும் போது சிறிய அளவில் லண்டனில் உள்ள இஸ்லிங்டன் (Islingdon) என்ற இடத்தில் நாராயணன் சுவாமிக்காக கோயில் எழுப்பினார். அதன்பின் இந்து சமயத்தைப் பரப்பும் நோக்கில் மிகப் பெரிய கோயில் ஒன்றை நிர்மாணிக்க வேண்டும் என்பது அவரது கனவாக இருந்தது. குருவின் ஆசையை நிறைவேற்ற பிரமுக் சுவாமி மஹாராஜ் என்பவர்தான் இந்தக் கோயிலைக் கட்டி முடித்து திறப்பு விழாவும் நடத்தி னார்.

மிகுந்த பொருட்செலவில் உருவான கோயில்களுள் இதுவும் ஒன்று. சுமார் 110 கோடி ரூபாய் பொருட்செலவில் உருவானதாம். 1992-ல் ஆரம்பிக்கப்பட்ட பணி 1995 ஆகஸ்ட் மாதம் முடிந்து ஆலயமும் எழும்பியது.

2820 டன்கள் எடைகொண்ட பல்கேரி யன் சுண்ணம்பு கற்களும் 2000 டன்கள் எடைகொண்ட இத்தாலியன் மார்பிளும் இந்தியாவுக்கு எடுத்துச்சென்று 1500 சிற்பிகளின் திறமையான கைவடிவத்தில்



லாவண்யா

26300 சிற்பச் சிலைகள் வடிவமைக்கப் பட்டு லண்டனுக்கு கப்பலில் கொண்டு வரப்பட்டு 3000 கட்டடக் கலைஞர்களின் கைவண்ணத்தில் இந்த கோயில் உரு வாகியிருக்கிறது. இந்தப் பணியாளர்கள் தவிர்த்து ஆயிரக்கணக்கான தன்னார்வ ஊழியர்களும் ஆலயம் எழுப்பும் பணி யில் பங்கேற்றிருக்கிறார்கள். அதில் அயல் நாட்டவர்களும் அடக்கம்.

வெயில், மழை என எதையும் உறுதி யிட்டு கூற முடியாத இங்கிலாந்தின் கால நிலைக்கு ஏற்ப, இந்தக் கோயில் வடி வமைக்கப்பட்டுள்ளது.





கேட்டைத் தாண்டி உள்ளே கால் வைக்கும் போதே பளபளக்கிறது மார்பிள். எங்கும் கார்பெட் விரித்து உட்புறமும் அந்தக் கம்பீரம் தொடர்கிறது. இரண்டு தளங்கள் கொண்ட இந்த ஆலயத்தினுள் முதல் தளத்தில் வீற்றிருக்கிறார் பெருமான். 'எங்கு காணினும் சக்தியடா' என்பது போல் காணும் இடமெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கிறது மார்பிள். இதுவரை கருநீலக் கண்ணனாகவே பார்த்த நமது கண்களுக்கு பளிங்கு நிறத்தில் பளபளக்கும் பெருமாள் சிலை அற்புத காட்சி. ராஜா ஒருவர் அலங்காரம் செய்து நிற்பது போலவே தோன்றும். விசேஷ வடிவமைக்கப்பட்ட முதல் கோயில் என் பெருமை இதற்கு உண்டு. அதற்கு எடுத்துக்காட்டாக இங்கே வளாகத்துக்குள்ளேயே 'ஹிந்துயிசம்' என்ற பெயரில் கண்காட்சி உள்ளது. சிந்து சமவெளி நாகரிகம் தொடங்கி இன்று வரை இந்து சமயம் வளர்ந்த விதத்தை ஓவியங்கள் சிற்பங்கள், பொம்மைகள் மூலமாக காணலாம். இந்து சமயத்தின் காவியங்களான இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றை இங்கே சிற்பங்களாக வடித்துள்ளனர். அதன் விளக்க உரையும் ஆங்கிலத்தில் இருக்கிறது.

இந்து சமயத்தின் பழக்க வழக்கங்கள்,





## ஆன்மீகத்தில் நாட்டம் இல்லாதவர்கள்கூட நாடும் வகையில் வீற்றிருக்கிறார் கிருஷ்ணர்!

காலங்களில் மட்டுமே தீபாரதனை என்று ஏற்கெனவே சொல்லப்பட்டிருந்ததால் கோயில் வளாகத்தில் அமர்ந்து பிரார்த்தனை செய்தோம். பிரகாரத்துக்குள் சத்தம் எழுப்பக் கூடாது. நிசப்த வேளையில் கூரை வழியாக வழிந்த மெல்லிய வெளிச்சமும் மனதுக்குப் பேரானந்தத்தைத் தந்தது.

கண்ணாடி வழியே காட்சி தரும் பெருமானைத் தரிசித்தபடி வெளியே வந்து கோயிலில் மற்ற பகுதிகளைச் சுற்றினோம். இங்கிலாந்தில் இந்து சமயத்தையும் கலாசாரத்தையும் பரப்பும் வகையில் ஆதிகால மொழி வடிவங்கள், அதன் விளக்கங்கள், நாணயங்கள், அளவுக் குறியீடுகள், பண்டைய தமிழர் பயன்படுத்திய மண்பாண்டங்களின் மாதிரிகள், அந்தக் கால மக்களின் வாழ்க்கை முறை, கலாசாரம், இந்து சமயம் மற்ற நாடுகளுக்கு எப்படிப் பரவி வளர்ந்தது என்ற வரலாறு ஆகியவற்றை ஓவியங்கள் வாயிலாகவும் விளக்கவுரை வாயிலாகவும் இங்கே அறியலாம். தவிர இங்கு உள்ள பெரிய திரையில் இந்து சமயம் குறித்த தகவல்கள், ஆன்மீகச் சொற்பொழிவுகள்

ஆகியவை ஒடிக்கொண்டு இருக்கும். இந்தியாவைப் பற்றி அறியாதவர்கள் கூட இந்த உரையைப் பொறுமையாய் அமர்ந்து கேட்பது ஆச்சரியத்தை ஏற்படுத்தும்.

வெளிநாட்டில் வளர்ந்து வரும் நமது இளைய சமுதாயம் மட்டுமின்றி, அந்நியர்களும் இந்து சமயத்தின் பெருமையை அறிந்து கொள்ள பெரும் எடுத்துக் காட்டாய் விளங்குகிறது இந்தக் கண்காட்சியகம். இதன் உள்ளே செல்ல ரெண்டு பவுண்ட்ஸ் கட்டணம். கண்காட்சியில் நாம் பார்த்தவற்றை கையடக்க புத்தகமாகவும் இங்கே விற்பனை செய்கிறார்கள்.

கேர் நீம் என்ற பெயரில் இங்கு செயல்பட்டு வரும் தன்னார்வ தொண்டு அமைப்பு சுமார் 900 தன்னார் வலர்கள் மூலம் கலை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், விளையாட்டுப் போட்டிகள் ஆகியவற்றை நடத்துவதோடு பக்தர்களின் இல்லங்களுக்கும் சென்று உதவிகளை செய்து வருகின்றனர். இப்படி பல்வேறு நிகழ்ச்சிகள் நடைபெறுவதால் ஆன்மீகத்தில் நாட்டம் இல்லாதவர்கள்கூட நாடும் வகையில் கோயில் கொண்டிருக்கிறார் பெருமாள்.





இக்கோயிலின் உச்சியைப் பார்த்தாலே வானத்தில் இருக்கும் உணர்வு ஒவ்வொரு மனதையும் நிறைத்துவிடும். தீபாவளி, புத்தாண்டு போன்ற சிறப்பு நாட்களில் பிரமுக் சுவாமி மஹாராஜ் கோபுரத்தின் மீது நின்று ஆன்மீகச் சொற்பொழிவு ஆற்றுவாராம். அப்போது வானத்தில் இருந்து அவர் பேசுவது போல கோயில் கோபுரம் வடிவமைக்கப்பட்டிருக்கும்.

இந்து கலாசாரம் மீது ஆர்வம் கொண்ட இந்துக்கள் மட்டுமன்றி, இங்கிலாந்து பிரதமர் முதல், உலக தலைவர்களும் அடிக்கடி வந்து போகும் சிறப்பு இந்தக் கோயிலுக்கு உண்டு. அப்துல் கலாம், டோனி பிளேர், இங்கிலாந்தின் முன்னாள் பிரதமர் டேவிட் கெமரூன், தற்போதைய பிரதமர் கோர்டன் ஃபிரவுன், மறைந்த இளவரசி டயானா, இங்கிலாந்தின் இளவரசர் பிரின்ஸ் சார்லஸ் உட்பட பலரும் இக்கோவிலுக்கு வருகை தந்துள்ளனர்.

இக்கோயிலின் சார்பாக, சுவாமிநாராயணன் என்ற பெயரில் பள்ளிக்கூடம் உள்ளது. மேற்கத்திய கலாசாரத்தின் அடிப்படையில் உருவான இந்து பள்ளிக்கூடம் என்ற பெயர் இதற்கு உண்டு. இந்து சமய முறைப்படி தயாராகும் உணவு வகைகளுக்காக, இங்கு உணவு விடுதி உண்டு. இந்தியப் பொருட்களை விற்பனை செய்யும் சூப்பர் மார்கெட்டும் உள்ளது.

இரவு நேரத்தில் பளீரிடும் விளக்கின் ஒளியில் தண்ணீரில் ஜொலிக்கும் சுவாமி நாராயணன் ஆலயத்தை ரசித்துக்கொண்டே இருக்கலாம்.

●

சினிமா தியேட்டரில் நெ.1 ஸ்நாக் ஐட்டம் எது? சுமாரான சினிமா, சூப்பரான சினிமா இரண்டிற்கும் கம்பெனி கொடுப்பது எது? டயட் கேர்ள்ஸ் அதிகமாகச் சாப்பிட விரும்புவது எது? குழந்தைகளின் ஃபேவரிட்? அட.... நம்ம பாப்கார்ன்தாங்க அந்த யூத் தோஸ்த்!

இளவட்டங்களின் நண்பன் பாப்கார்ன். கொஞ்சுண்டு கலோரி, நிறைய்ய நார்ச் சத்து, உருளை சிப்ஸை விட அதிக இரும்புச் சத்து, புரோட்டின், கார்போஹைரட்ரேட் கொண்ட மிக எளிய உணவுதான் பாப்கார்ன். "முறுக்கு, தேன்குழல், சீடை மாதிரி சாப்பிடும் போது சத்தம் வராது. சாப்பிடும் போது காட்டிக் கொடுக்காத நண்பன் நம்ப பாப்பு..." என்கிறார் பாப்கார்ன் சங்க உறுப்பினர்!

மெக்ஸிக்கோவில்தான் முதன் முதலாக பாப்கார்ன் கண்டுபிடிக்கப்பட்டதாம். நாலாம் நூற்றாண்டிலிருந்து சோளம் சாப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் அதை 'பொரியவைத்து' (அ) சுட்டு மசாலா தடவி சாப்பிடும் கலைகளெல்லாம் நாகரிக வளர்ச்சி!

அமெரிக்கப் பழங்குடி (ஆஸ்டெக்) மக்கள் சோளத்தைச் சாப்பிடுவது மட்டுமல்லாது, அதனால் தினுசுதினுசான நகைகள், தலையலங்காரங்கள் எனச் செய்து, போட்டு மகிழ்ந்திருக்கிறார்கள். சோளக் கதிர்களை வெட்டவெளியில் தீமூட்டி அதில் எறிந்து விட்டு சோளம் எந்த திசையில் வெடித்து (பாப்பிங்)ச் செல்கிறதோ அதை வைத்து ஜோசியம் சொல்வார்களாம்.

1493-ல் கிறிஸ்டோஃபர் கொலம்பஸ் யூரோப்புக்கு சோளத்தை அறிமுகப்படுத்தினார். (எதையாவது எடுத்து வந்து 'படுத்துவதே' இவருக்கு வேலையாப் போச்சு என திருமதி கொலம்பஸ் அழாத நாளில்லை) ஆனால் சோள விவசாயம் சூடுபிடித்தது 18-ம் நூற்றாண்டில்தான்!

சோளக் கதிர்கள் சூடாகும் போது உள்ளிருக்கும் ஈரப்பதத்தினால் விரிவடையும். ப்ரஷர் தாங்க முடியாமல் பட்டென்று பொரியும். இதனுடைய டெம்பரேச்சர் சுமார் 240லிருந்து 260 சென்டிகிரேட் வரை இருக்கலாம்.

அமெரிக்க பழங்குடி மக்கள் விஞ்ஞானபூர்வமாக பாப்கார்னை ஆராயவில்லை. ஒவ்வொரு சோளக் கதிரிலும் 'ஆன்மா' இருப்பதாக நம்பினார்கள். "சுட வைக்கும்போது அவர்களுடைய வீடு கொதித்துப் போவதால் கோபத்தில் வெடித்து பட்டென்று கிளம்பி விடுகிறார்கள்..." என்று பேய் நம்பிக்கை ஆருடம் சொன்னார்கள்.

**சில பாப் தகவல்கள்:**

- முதன்முதல் பாப்கார்ன் மெஷின்



# 'யூத் தோஸ்த்'

ண்டுபிடிக்கப்பட்டது 1800ல்! சார்லஸ் ஃபிரேட்டர் என்ற ஷிக்காகோவாசி அன்று ஆரம்பித்தது இன்று வரை தொடர்கிறது.

- சினிமா டிக்கெட்டை விட சூடான விற்பனை பாப்கார்னுக்கு. தியேட்டர் வெளியே விற்பனையான பொருளுக்கு உள்ளேயே ஸ்டால் போட்டு சிம்மாசன கௌரவம் கொடுத்தது 1912-ல்.
- சுமார் ஏழாயிரம் பாக்கெட்டுகள் பாப்கார்ன் விற்பனை ஒவ்வொரு தியேட்டரிலும் ஆகிறதாம். (சினிமா ஊத்திக்கலாம், பாப்கார்ன் படுக்கவே படுக்காது).
- வெடிக்காத சோளத்தை 'ஓல்டு மெய்ட்' (கௌவிங்க) என்று செல்லமாகக் குறிப்பிடுவதுண்டு.
- ஒவ்வொரு வருடமும் சுமார் 17 பில்லியன் காலன்கள் பாப்கார்ன் ஸ்வாஹா செய்கிறார்களாம் அமெரிக்கர்கள். எளிமையாகச் சொல்லப் போனால் எம்பயர் ஸ்டேட் பில்டிங்கை 18 முறை நிரப்பலாம் பாப்கார்னினால்... அந்த அளவு!
- உலகிலேயே பாப்கார்னுக்கென்றே மியூஸியம் இருப்பது ஓஹையோவில்' தி வயன்டாட் மியூசியமை நெட்டிலும் பார்க்கலாம்.
- புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள், அரிஸோனாவிலிருக்கும் குகையில் மூவாயிரம் ஆண்டுகளாக கிடந்த சோளக் கதிர்களைக் கண்டு பிடித்துப் பொரித்து பார்க்கையில் பட்பட்டென்று ஃப்ரெஷ்ஷாக பொரிந்ததாம். (ஒரு ஓல்டு மெய்டு கூட இல்லை!)




▾ லதா சேகர் ▾

# பாப்பு!

# அம்பாசமுத்திரம் அம்பானி

☐ ஹீரோவாக கருணாஸ் இரண்டாவது முறையாக ஜெயித்திருக்கும் படம். அம்பானி ரேஞ்சுக்கு உயர அடிமாட்டு ரேஞ்சுக்கு உழைக்கும் கேரக்டரில் கருணாஸ் கனகச்சிதம்.

☐ படத்துக்கு இசையும் கருணாஸ்தான். ஆனால் நடிப்பு அளவுக்கு இசை அவருக்கு கைவரவில்லை.

☐ கருணாஸைக் காதலிப்பதும், கெட்ட ஆட்டம் போடுவதும் மட்டுமே ஹீரோயின் நவ்னீத் கவூர்க்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அஸைன்மென்ட். அவரும் அதை அசால்டாகச் செய்கிறார்.

☐ கருத்துச் சொல்லாமலும், காதைப் புண்படுத்தாமலும் கதையோடு ஊடாடி வரும் காமெடி மனசுக்கு இதம்.

☐ நவ்னீத் கவூரை ஒரு தலையாய் காதலிக்கும் லிவிங்ஸ்டன் ஸ்கிரீனில் தோன்றும்போது தியேட்டர் கலகலப்பாகிறது.

☐ கருணாஸின் மீது நவ்னீத்துக்குக் காதல் வந்ததும் கதை தடுமாறித் தடம்மாற... கோட்டா சீனிவாசராவ் வில்லத்தனம் செய்வாரோ என்று எதிர்பார்ப்பை ஏற்றி நிமிர வைக்கிறார் இயக்குநர் ராம்நாத்.

☐ ஆனால் கதையோடு ஒட்டாத ஒளிப்பதிவு, கேரக்டரோடு ஒன்றாத ஹீரோயின், நெளிய வைக்கும் சில லாஜிக்ஸ்... ஆகியவற்றையும் கவனித்திருந்தால் இன்னும் பளிச்சிட்டிருக்கலாம்.

**அம்பாசமுத்திர அம்பானி - மிடில்கிளாஸ் ஆடுகளம்.**

- மங்கைராஜன்

**4**

**படக்கதைகள்!**





# அனிமேஷன் அட்டகாசம்!

**தனிமை விரும்பி!**

**கதைகள், கவிதைகள், போட்டி...**

# கோகுலம்

ஜீலை 2010 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57" Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11" Licensed post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11" Registered as a Newspaper in Srilanka.